# சமர்ப்பணம்

குத்புல் இர்ஷாத், ரயீஸுல் அஸ்ஃபியா, ஸுல்தானுஸ் ஸுஃபியா, ரயீஸுல் முஃபஸ்ஸிரீன், ஸனதுல் முஹத்திஸீன், ஜைனுல் புகஹா, முஹக்கிக்கே ஹக் வ யகீன், முஜத்தித்தே தீன் வ முபீன் அபுல் பயாஸ் அல்லாமா அஷ்ஷெய்கு ஹழ்ரத் ஷாஹ் வலியுல்லாஹ் முஹத்திஸ் திஹ்லவி ஸுஃபி காதிரி கத்தஸல்லாஹு ஸிர்ரஹுல் அஸீஸ் அவர்களது மேலான சமூகத்திற்கு !

# இந்தியாவில் இஸ்லாமிய பிரிவினையின் வரலாறு

*(19ஆம் நூற்றாண்டில் இந்திய இஸ்லாமியர் இடையே வட இந்தியாவில் உண்டான பிரிவினையின் ஆரம்பமும், அதன் வரலாற்றுப் பின்னணியும்)*


**உருது மூலம்: அல்லாமா யாஸீன் அக்தர் மிஸ்பாஹி**

**ஆங்கில மொழிபெயர்ப்பு: மவ்லானா முஹம்மத் அக்தஸ் மிஸ்பாஹி**

**அபூ காலித்**




ஜமாஅத்தே இஸ்லாமி இந்தியா அமைப்பினரின் வாரமிருமுறை வெளிவரும் **'தாவத்'** வார இதழ் சார்பில், பொதுஜனங்கள் மத்தியில் 'ஹனஃபி பரேல்வி ' என்றழைக்கப்படும், அஹ்லுஸ் ஸுன்னத் வல் ஜமாஅத்தின் கொள்கைகளைப் பற்றிய அறிமுகம் எழுதி தருமாறு கேட்டுக் கொள்ளப்பட்டது. என்னிடம் இந்த ஜமாஅத்தின் கருத்துகளைப் பற்றியும், இதன் மதிப்புமிகுந்த உலமாக்களைப் பற்றியும், இதன் இஸ்லாமிய பள்ளிகள் மற்றும் நிறுவனங்கள் பற்றியும் எழுதுமாறு என்னிடம் கேட்கப்பட்டது. இது **'தாவத்'** சிறப்பு இதழில் **'ஹிந்துஸ்தானி முஸல்மான் நம்பர்'** என்ற தலைப்பில் **(பகுதி 2, அக்டொபர் 1999)** அன்று வெளியிடப்படும்.

இது அஹ்லுஸ் ஸுன்னத் வல் ஜமாத்தை பின்பற்றுபவர்களைப் பற்றிய சரியான அறிமுகமாகவும், அவர்களின் கருத்துக்கள் நம்பகமான முறையில் வழங்கப்படுவதற்குமுரிய வாய்ப்பாக அமையும். அதனை நான் ஏற்றுக் கொண்டு இந்த கட்டுரையை எழுதினேன். இந்த தலைப்பு ஒரு முழுமையான புத்தகமாக வெளிவர தகுதியானது என்றாலும், இந்த கட்டுரை எதிர்காலத்தில் அத்தகைய புத்தகத்தின் அறிமுகமாக செயல்பட வாய்ப்புள்ளது.

நான் பல விரிவான விவரங்களை வழங்குவதைத் தவிர்த்து ஒரு சுருக்கமான அறிமுகத்தை முன்வைக்க முயற்சித்துள்ளேன். இந்த கட்டுரை வாசகரின் அறிவை அதிகரிக்கும் என்பதோடு, இந்த விஷயத்தை மேலும் ஆராய்ச்சி செய்ய அவர்களுக்கு ஒரு காரணமாக இருக்கலாம் என்று நான் நம்புகிறேன்.

துவக்க காலம் முதல் இந்தியாவில் உள்ள பெரும்பான்மை இஸ்லாமியர் ஹனஃபி மத்ஹபை பின்பற்றும் அஹ்லுஸ் சுன்னத் வல் ஜமாத்தினராக இருந்தனர். இந்தியாவின் கொங்கன் பகுதியிலும் தென்னிந்தியாவின் தமிழகம் மற்றும் கேரளாவில் ஷாஃபி மத்ஹபை பின்பற்றும் அஹ்லுஸ் சுன்னத் வல் ஜமாத்தினராக இருந்தனர். சில பகுதிகளில் ராபிழி ஷியாக்கள் இருந்து வந்தனர்.

இந்திய முஸ்லீம் சமூகத்தில் கொள்கை சார்ந்த குழுக்களின் பிளவு என்பது பத்தொன்பதாம் நூற்றாண்டின் முதல் காலாண்டில் ஏற்பட்டது. குறிப்பாக மத்ஹப் உடைய நான்கு இமாம்களை தக்லீது செய்வது கருத்து வேற்றுமைக்கான ஒரு முக்கிய காரணியாகவும், தஸவ்வுப் என்னும் தரீகத்துடைய வழிமுறைகளும் ஒரு சிறிய அளவிற்கு பிரிவின் இலக்காயின.

தக்லீதும், தஸவ்வுபும் வழிகேடான பித்அத்கள் என்று எதிர்ப்பாளர்களால் சித்தரிக்கப்பட்டு, இதன் காரணமாக அஹ்லுஸ் சுன்னத் வல் ஜமாத்திற்கு மாற்றமான பல உட்பிரிவுகள் உருவாயின.

இந்த உண்மைகளை வரலாற்றுரீதியான ஆதாரங்களைக் கொண்டு ஆய்வு செய்வதற்கு, இரண்டு மேற்கோள்கள் எடுத்துக்காட்டப்படுகின்றது.

முதலாவது ஹக்கீம் அப்துல் ஹை ரேபரேலி உடையது, இன்னொன்று சுலைமான் நத்வி, மவ்லவி ஷிப்லி நுஃமானி உடைய மாணவர்.

**[1] அப்துல் ஹை ரேபரேலி உடைய மேற்கோள்:**

சில அறிஞர்களின் கருத்துப்படி, பிக்ஹ் உடைய விஷயங்களில் ஓர் இமாமை தக்லீது செய்வது ஹராமும், அனுமதிக்கப்படாததும் ஆகும். குர்ஆனிலும், ஸுன்னாஹ்விலும் தெளிவாக உள்ள தீர்ப்புகளை பின்பற்ற வேண்டும், மேலும் பிக்ஹ் உடைய விஷயங்களில் கியாஸ், இஜ்மாவுக்கு எந்த பங்கும் இல்லை.

இவ்வகையான கொள்கைக் கோட்பாட்டை பின்பற்றிய அறிஞர்கள், மவ்லானா பகீர் இலாஹாபாதி பின் யஹ்யா, மியான் நசீர் ஹுசைன் திஹ்லவி பின் ஜவ்வாத் அலி, நவாப் சித்திக் ஹசன் போபாலி மற்றும் அவர்களது ஆதரவாளர்கள்.

இன்னுமொரு கூட்டம் தக்லீதைக் கொண்டு தீவிர எதிர்ப்பு வாதங்களை முன்வைத்தது, இன்னும் அவர்கள் அது தடை செய்யப்பட்ட ஒன்றென பிடிவாதம் செய்தனர். அவர்கள் முகல்லீதீன்கள் (இமாம்களைப் பின்பற்றுவோர்) தங்களது நப்சின் அடிமைகள் என்றும் அஹ்லுல் பிதாவைச் சார்ந்தவர்கள் என்றும் கூறினர்.

அவர்கள் தமது கருத்தில் எந்த அளவிற்கு கடுமையானவர்களாக இருந்தார்கள் என்றால் அவர்கள் மத்ஹப் உடைய நான்கு இமாம்களையும் சிறுமைப்படுத்தபவர்களாக இருந்தனர், அதிலும் குறிப்பாக இமாமுல் அஃலம் இமாம் அபூஹனீபா அவர்களின் மீது.

இவ்வகையான கொள்கைக் கோட்பாட்டை பின்பற்றியவர்கள் மவ்லானா அப்துல் ஹக் பணாராசி பின் பஜ்லுல்லாஹ் மற்றும் அப்துல்லாஹ் சித்திக்கி இலாஹாபாதி, மற்றும் அவர்களது ஆதரவாளர்கள்.

இவர்கள் தமது கொள்கையைப் பரப்ப எழுதிய நூற்கள் பின்வருமாறு,

- மவ்லவி மொய்னுதீன் சிந்தி எழுதிய "**திராசத்துள் லபீப்**"
- மவ்லவி பாகீர் இலாஹாபாதி எழுதிய "**குர்ரதுல் ஜன்**"
- மவ்லவி இஸ்மாயில் திஹ்லவி எழுதிய"**தன்வீருள் ஐனைன்**"
- மியான் நசீர் ஹுசைன் எழுதிய "**மியாருள் ஹக்**"
- மவ்லவி அப்துல்லாஹ் இலாஹாபாதி எழுதிய "**இஃதிசாமுஸ் ஸுன்னா**"
- நவாப் சித்திக் ஹசன் போபாலி எழுதிய "**அல் ஜன்னாஹ் பில் உத்ஸவத்தில் ஹஸனாஹ் பிஸ் ஸுன்னாஹ்**"

ஹனபி உலமாக்களும் இருவகையினராக இருந்தார்கள்:

[i] ஆராய்ச்சி மற்றும் ஆய்வின் பிரகாரம் தக்லீதை ஏற்பவர்கள். "**அர்கான் ஏ அர்ப ஆ** " நூலின் ஆசிரியர் முல்லா பஹ்ருல் உலூம் மவ்லானா அப்துல் அலி பின் முல்லா நிஜாமுத்தீன், "**அல் தலீக் அல் முமஜ்ஜத்** " நூலின் ஆசிரியர் மவ்லானா அப்துல் ஹை பிரங்கி மஹாலி பின் அப்துல் ஹலீம்.

[ii] மற்றோரு வகையான ஹனபி உலமாக்கள் தக்லீதை முழு மூச்சாகப் பின்பற்றியவர்கள், இன்னும் தக்லீதுக்கு எதிரான எந்த ஒரு சமரசத்தையும் ஏற்காதவர்கள். உதாரணமாக மவ்லானா ஷைகு பஜ்லே ரஸூல் பதாயூனி, மற்றும் அவர்களது ஆதரவாளர்கள்.[1]

## [2] சுலைமான் நத்வி உடைய மேற்கோள்

மவ்லவி ரஷீத் அஹ்மத் கங்கோஹி மற்றும் மவ்லவி காசிம் நானோத்வி (தாருல் உலூம் தேவ்பந்தின் ஸ்தாபகர்) ஆகியோர் ஷாஹ் அப்துல் கனி முஜத்திதியின் மிகச் சிறந்த மாணவர்கள். இஸ்மாயில் திஹ்லவியின் மாணவர் மவ்லவி ஷவ்கத் அலி ஜூஅன்புரி. இவர்கள் பித்அத் எதிர்ப்பாளர்களாகவும்,தூய்மையான தவ்ஹீதை போதனை செய்வதாகவும் ,இன்னும் ஹனபி மத்ஹபை பின்பற்றுபவர்களாகவும் தமது கூற்றினை வெளிப்படுத்தினர் .

மவ்லவி ஷாஹ் இஷாக்கின் மாணவர் மவ்லவி நசீர் ஹுசைன் திஹ்லவி. இவரும் இவரது ஆதரவாளர்களும் பித்அத் எதிர்ப்பாளர்களாகவும், தூய்மையான தவ்ஹீதை போதனை செய்வதாகவும், இன்னும் ஹனபி மத்ஹபை பின்பற்றுவதை தவிர்ப்பவர்களாகவும் தமது கூற்றினை வெளிப்படுத்தினர் .மார்க்க சட்டங்களை நேரடியாக ஹதீத் நூற்களில் இருந்து பெற்று அதன் பிரகாரம் அமல் செய்யலாம் என்று தமது

---

[1] இஸ்லாமி உலூம் ஓ பூணூன் ஹிந்துஸ்தான் மேன் ,பக்கம் 154,தாருல் முஸன்னிபீன் ,ஆசம்கர்ஹ் ,ஹக்கீம் அப்துல் ஹை ரே பரேலி

கூற்றினை வெளிப்படுத்தினர். இந்த கூட்டத்தினர் '**அஹ்லே ஹதீத்**' என்று அழைக்கப்பட்டனர்.

மூன்றாவது வகையான உலமாக்கள் தமது பழமையான பாரம்பரியங்கள் மீது உறுதியாக நிலைத்திருந்து தம்மை '**அஹ்லுஸ் ஸுன்னாஹ்** ' என்றழைத்தனர். இந்த கூடடத்தின் தலைவர்கள் யாவரும் பதாயூன் மற்றும் பரேலியைச் சார்ந்த உலமாக்களாகும். [2]

அப்துல் ஹை ரேபரேலி மற்றும் சுலைமான் நத்வி அகியோரைப் பொறுத்தவரை, தக்லீதின் மீது உறுதியாக நின்று, இஸ்லாமிய பாரம்பரியத்தை பற்றிப் பிடித்த கூட்டம் தம்மை "அஹ்லுஸ் ஸுன்னாஹ் " என்றழைத்தனர். இந்த உலமாக்கள் பெரும்பாலும் பதாயூன் மற்றும் பரேலியைச் சார்ந்தவர்கள். இன்றளவும் அவர்கள் தக்லீதை வீட்டுக் கொடுக்கவும் மாட்டார்கள் மற்றும் இஸ்லாமிய பாரம்பரியத்தை விட்டு அகலவும் மாட்டார்கள்.

இஸ்லாமிய வரலாற்றாசிரியர்களான அப்துர்ரஹ்மான் பர்வேஸ் இஸ்லாஹி மற்றும் பேராசிரியர் கலாநிதி முஹம்மது அய்யூப் காதிரி ஆகியோர் இஸ்லாமிய சமூகத்தில் ஏற்பட்ட பிளவின் மூல ஆணிவேரை பின்வருமாறு விவரிக்கின்றனர்.

* ஹஸ்ரத் ஷாஹ் அப்துல் அஜீஸ் முஹத்தித் திஹ்லவி (கத்தஸல்லாஹு ஸிர்ரஹுல் அஸீஸ்) அவர்களின் மாணாக்கரில் ஒரு கூட்டம் அன்னாருடைய கொள்கையில் உறுதியாக இருந்து ஷரீயத் மாற்றமான விஷயங்களில் எதையும் பொறுத்துக்கொள்ள இயலாதவர்களாக இருந்தனர் .இன்னொரு கூட்டம் தக்லீதை மறுக்குமாறும், இஜ்திகாதை ஏற்குமாறும் அறைகூவலிட்டது. இவ்வாறு மெல்ல மெல்ல, எனினும் உறுதியாக இவ்விருவரிடையே சில விஷயங்களில் கொள்கை பிரிவுகள் உண்டாயின.[3]

* அவாத் நகரம் மிகச் சிறந்த சிந்தனையாளர்களை உருவாக்கியது .அவர்களுள் மவ்லானா பஜ்லே ஹக் கைராபாதி (ரஹ்மதுல்லாஹி அலைஹி) அவர்கள் மிகவும் அபூர்வமானவர்கள். தமது தந்தையார் பஜ்லே இமாம் அவர்களிடம் மட்டுமல்லாது ஷாஹ் வலியுல்லாஹ் அவர்களின் குடும்பத்தினரிடம் இருந்து அவர் கல்வி கற்றார்.

---

[2] ஹயாதே ஷிப்லி ,பக்கம் 46 ,தாருல் முஸன்னிபீன் , ஆசம்கர்ஹ் ,சுலைமான் நத்வி

[3] முப்தி சத்ருத்தீன் ஆஸுர்தாஹ் ,பக்கம் 138,மக்தபா ஜாமா ,அப்துர்ரஹ்மான் பர்வேஸ் இஸ்லாஹி

எனினும் அவர் ஷாஹ் இஸ்மாயில் திஹ்லவி மற்றும் ஷாஹ் இஷ்ஹாக் ஆகியோரின் பிழையான கொள்கைகளை எதிர்த்து தமது பாரம்பரிய இஸ்லாமிய மரபுகளின் மீது உறுதியாக நின்றார்.

மவ்லானா மஹபூப் அலி திஹ்லவி (ஷாஹ் அப்துல் அஜீஸ் முஹத்தித் திஹ்லவி (ரலியல்லாஹு அன்ஹு) அவர்களின் மாணாவர்) அவர்களும் அஹ்லுஸ் ஸுன்னாஹ் கொள்கையைச் சார்ந்தவர் தான் .மவ்லானா பஜ்லே ஹக் மற்றும் மவ்லானா மஹபூப் அலி திஹ்லவி ஆகியோர் ஷாஹ் இஸ்மாயில் திஹ்லவியின் வஹாபிய கொள்கைகளை கடுமையாக எதிர்த்தனர். இவர்களுக்கு உறுதுணையாக பரேலி, பதாயூனைச் சார்ந்த உலமாக்கள் நின்றனர்.[4]

மவ்லானா தனாவுல்லாஹ் அம்ரித்சரி மற்றும் முஹம்மது ஜாபார் தாநேசரி ஆகியோரின் கருத்துக்கள் உண்மைக்கு நெருக்கமாக இருப்பதோடு, சரியான முடிவை எத்துவதற்கு அனுகூலமாயிருக்கின்றன.

* நான் இந்தியாவில் இருந்த காலத்தில் [ஹிஜ்ரி 1280- 1864ஆம் ஆண்டு], முழு பஞ்சாபிலும் வஹாபிய கொள்கையை பின்பற்றுவோர் பத்து நபர்கள் கூட இருக்க மாட்டார்கள் என நம்புகின்றேன் .இப்பொழுது [1302 ஹிஜ்ரி - 1884ஆம் ஆண்டு] ஒவ்வொரு ஊரிலும் .ஒவ்வொரு நகரிலும் நான்கில் ஒரு'நபர் இஸ்மாயில் திஹ்லவியின் கொள்கையைப் பின்பற்றும் வஹாபியாக உள்ளார்.[5]

* அமிர்தசரில் முஸ்லிம்,முஸ்லிமல்லாதோரின் எண்ணிக்கை சமமாக இருந்தது .எண்பது வருடம் முன்பு ,எல்லா இஸ்லாமியரும் இன்று 'ஹனபி பரேல்வி ' எனப்படும் கொள்கையைப் பின்பற்றுபவர்களாக இருந்தனர் .[6]

மவ்லானா தனாவுல்லாஹ் அம்ரித்சரி **'மஜல்லா அஹ்லே ஹதீத்'** பத்திரிக்கையின் ஆசிரியர் 1973ல் கூறுகின்றார், தம்மை பொறுத்தவரை, 165 ஆண்டுகளுக்கு முன்பு, பஞ்சாப் அம்ரித்சரின் இஸ்லாமிய சமூகம், இன்று 'பரேல்வி ' என்று அழைக்கப்படும் மக்களின் அதே கொள்கைகளைத் தான் கொண்டிருந்தனர். இன்னும் முஹம்மது ஜாபர் தான்சேரியை பொறுத்தமட்டில், 200 ஆண்டுகள் முன்பு வரை ஒருங்கிணைந்த பஞ்சாபில் வஹாபிகளின் எந்த அடையாளமும் இல்லை

[4] உருது ரோஜனமா ,உருது மேன் மத்ஹபி அதப் ,பக்கம் 55, டிசம்பர் 1995

[5] தவாரிக் ஏ அஜீபா ,பக்கம் 81, சங் மெயில் பப்ளிகேஷன் , லாகூர் ,முஹம்மது ஜாபார் தாநேசரி

[6] ஷமா தவ்ஹீத் ,பக்கம் 4,மக்தபா தானாயியா ,சர்கோதா ,பஞ்சாப் ,தனாவுல்லாஹ் அம்ரத்சரி

அல்லது இஸ்மாயில் தெஹ்லவியின் கொள்கைகளை பின்பற்றுவோரும் இல்லை.

சிராஜுல் ஹிந்த் ஹஸ்ரத் ஷாஹ் அப்துல் அஜீஸ் முஹத்தித் திஹ்லவி (ரலியல்லாஹு அன்ஹு) அவர்களின் மறைவுக்கு பின் [மறைவு - 1239 ஹிஜ்ரி - 1823ஆம் ஆண்டு] இஸ்லாமியர் பலர் ஸுன்னி ஹனபி கொள்கையில் இருந்து பிறழ்வுபட்டு கைர் முகல்லிது எனும் மத்ஹப் மறுப்பாளர்கள் ஆயினர். இஸ்மாயில் திஹ்லவியின் நூல் **'தக்வியத்துல் ஈமான் '** அத்தகையோரின் சிந்தனைகளை சுருக்கமாகக் காட்டியது.

தேவ்பந்தி பிர்காவின் 'ஹக்கீமுல் உம்மத்' (?) அஷ்ரப் அலி தானவி தனது நூலில் இந்திய வஹாபிகள் மூல கர்த்தா இஸ்மாயில் திஹ்லவி என்ன நினைத்தார் என பின்வருமாறு எழுதுகிறார்.

"நான் இந்த நூலை எழுதியுள்ளேன், இன்னும் இதில் சில இடங்களில் கடுமையான சொற்கள் சொல்லப்பட்டுள்ளன என்பதையும் அறிவேன், இன்னும் சில இடங்களில் தீவிரமான கருத்துக்கள் சொல்லப்பட்டுள்ளன என்பதையும் அறிவேன். உதாரணமாக சில மறைவான ஷிர்க்கை (ஷிர்க் ஏ காஃபி) உண்டாக்கும் செயல்களை நான் பகிரங்கமான ஷிர்க் (ஷிர்க் ஏ ஜாலி) என்று பெயரிட்டுள்ளேன். இதை கொண்டு மிகப் பெரிய சீற்றம் உண்டாகும் என்று நான் பயப்படுகின்றேன் .நான் இங்கு இருந்தால், இந்த கருத்துக்களை எட்டு அல்லது பத்து ஆண்டுகளுக்கு பிரகடனப்படுத்தி இருப்பேன். எனினும் இந்த நொடியில் எனது திட்டம் ஹஜ்ஜுக்கு சென்று அதன் பின் ஜிகாத் புரிய செல்வதே .எனவே, அடுத்த எட்டு அல்லது பத்து ஆண்டுகளுக்கு இந்த கொள்கை கருத்துக்களை பரப்ப இயலாது .இதை வேறு யாரும் செய்ய மாட்டார்கள் என்பதால் இந்த நூலை ஒரே பதிப்பில், இதற்கு எதிராக சீற்றம் வரும் எனும் போதிலும் எல்லாவற்றையும் பதிப்பிக்க முடிவு செய்தேன். எனினும் இது சில காலங்களில் தணிந்துவிடும் என்று நம்புகின்றேன்"[7]

கடுமையான சொற்கள் ஒரு எழுத்தாளனின் பழக்கமாக இருக்கலாம். எனினும் இஸ்மாயில் திஹ்லவிக்கு ஷிர்க் ஏ காஃபி யை,ஷிர்க் ஏ ஜாலி என்று பெயரிடுவதற்கான அதிகாரம் எங்கிருந்து வந்தது?

சீற்றத்தை உண்டாக்கும் அவரது நோக்கம் நிறைவேறியது, எனினும் பிளவுபட்ட இந்த இந்திய இஸ்லாமிய சமூகத்தின் இரணம் இன்னும் ஆறவில்லை.

[7] ஹிகாயத் ஏ அவ்லியா (அர்வாஹ் ஏ தலாதா ),பக்கம்'98,குதுப் கானா நயீமியா ,தேவ்பந்த் ,அஷ்ரப் அலி தான்வி

மவ்லானா செய்யித் அஹ்மத் ரஜா பிஜ்நோரி காசிமி அவர்கள் கூறுகின்றார்கள்,

"வெட்கக்கேடான விஷயம் என்னெவெனில் இந்த புத்தகம் [தக்வியத்துல் ஈமான்] காரணமானாக சுமார் 20 கோடி மக்கள் தொகை கொண்ட இந்திய முஸ்லிம்களில், தொண்ணூறு சதவீதம் ஹனபிக்கள், இரண்டு பிரிவுகளாக பிளவுபட்டு போனார்கள்."[8]

மவ்லானா அபுல் கலாம் ஆசாத் எழுதுகின்றார்கள்,

"மவ்லானா இஸ்மாயில் திஹ்லவி, மவ்லானா முனவ்வருத்தீன் அவர்களின் பள்ளித் தோழர். ஷாஹ் அப்துல் அஜீஸ் (ரஹ்மத்துல்லாஹி அலைஹி) அவர்களின் மறைவுக்குப் பின், இஸ்மாயில் திஹ்லவி எழுதிய **'தக்வியத்துள் ஈமான் '** மற்றும் **'ஜிலாஉல் ஐநைன்'** நூற்களின் மூலம் அவரது கொள்கைகள் நிலமெங்கும் பரவின .அந்த கொள்கைகளை எதிர்த்து உலமாக்கள் கிளர்ந்து எழுந்தனர்.

இந்த நூற்களை அதிகம் எதிர்த்த நபர் மவுலானா முனவ்வருத்தீன் .அவர் இதற்கு எதிராக பல நூற்களை எழுதினார் .இறுதியாக ஹிஜ்ரி 1240ல் பிரசித்தி பெற்ற அந்த விவாதம் ஜாமியா மஸ்ஜித் ,டில்லியில் நடைபெற்றது .இந்தியாவில் உள்ள அனைத்து உலமாக்களிடமும் பத்வா கோரப்பட்டது ,பின்னர் ஹரமைன் ஷரீபிலும் இருந்து பத்வா பெறப்பட்டது .அவரின் எழுத்துக்களில் இருந்து புலனாகின்றது என்னவென்றால், மவ்லானா முனவ்வருத்தீன், இஸ்மாயில் திஹ்லவியையும் அவரது மருமகன் அப்துல் ஹையையும் சமாதானம் செய்ய முயற்சித்தார் என்பதும் ,அவர்களை சம்மதிக்க வைக்கவும் எல்லா நடவடிக்கைகளையும் எடுத்தார் .

எனினும் எல்லா முயற்சிகளும் தோல்வியில் அடைந்த பின்னர் தமது கொள்கைகளை விவாதம் செய்தும், மற்ற உலமாக்களுக்கு மறுப்பு வழங்குமாறும் நிர்பந்திக்கப்பட்டார். தில்லியின் ஜாமிஆ மஸ்ஜிதில் மிகப் பிரசித்தி பெற்ற அந்த விவாதம் நடைபெற்றது.
ஒரு பக்கம் இஸ்மாயில் திஹ்லவியும் அவரது மருமகன் மவ்லவி அப்துல் ஹை மற்றோரு பக்கம் மவ்லனா முனவ்வருத்தீன் மற்றும் தில்லியின் அனைத்து உலமாக்களும்.[9]

---

[8] அன்வாருல் பாரி , பக்கம் 107, நஸீருல் உலூம் , பஜ்னுர், மவ்லானா செய்யித் அஹ்மத் ரிழா பஜ்னோரி

[9] ஆஸாத் கீ கஹானி ,பக்கம் 48,மக்தபா கலீல் ,உருது பஜார் ,லாகூர் , மவ்லானா அப்துல் ரஜ்ஜாக் மலீஹ்ஆபாதி

மவ்லானா மக்சுஸுல்லாஹ் பின் ஷாஹ் ரபிய்யுத்தீன் திஹ்லவி,
மவ்லானா முஹம்மது மூஸா பின் ஷாஹ் ரபிய்யுத்தீன் திஹ்லவி,
மவ்லானா பஜ்லே ஹக் கைராபாதி (ஷாஹ் அப்துல் அஜீஸ் முஹத்தித் திஹ்லவி அவர்களின் மாணவர்),

முப்தி சத்ருத்தீன் ஆஸுர்தாஹ் (ஷாஹ் அப்துல் அஜீஸ் முஹத்தித் திஹ்லவி அவர்களின் மாணவர்), மவ்லானா முஹம்மது பஜ்லே ரஸூல் உத்மானி பதாயூனி, மவ்லானா அஹ்மத் ஸயீத் நக்ஷபந்தி திஹ்லவி, மவ்லானா ரஷீத்துத்தீன் திஹ்லவி, மவ்லானா கைருத்தீன் தெஹ்லவி, ஹக்கீம் சாதிக் அலி கான் திஹ்லவி (மஸீஹுல் முல்க் ஹக்கீம் அஜ்மல் கான் அவர்களின் பாட்டனார்),

மவ்லானா செய்யித் அஷ்ரப் குல்ஷன் ஆபாதி , மவ்லானா முக்லீசூர் ரஹ்மான் சட்கமி , மவ்லானா கலந்தர் அலி ஜுபைரி பானிபதி  போன்ற எண்ணற்ற அஹ்லுஸ் ஸுன்னாஹ்வின்  சத்திய உலமாக்கள் இந்த புதிய வஹாபிய கொள்கைகளுக்கும்
,கோட்பாடுகளுக்கும் எதிராக  மறுப்புரைகளை தமது எழுத்தின் மூலமும் ,சொற்பொழிவின் மூலமும் வெளிப்படுத்தினர் .
அவர்கள் அஹ்லுஸ் ஸுன்னாஹ்வின் கொள்கைகளை பாதுகாக்க தமது மார்க்க அறிவினாலும், செயலாலும் இந்த புனித ஜிஹாதில் பங்கெடுத்தனர்.

அல்லாமா பஜ்லே ரஸூல் உத்மானி பதாயூனி அவர்கள் **"தக்வியத்துல் ஈமான் "** பற்றி ஏழு கேள்விகளை ஹழ்ரத் ஷாஹ் மக்சுஸுல்லாஹ் பின் ஷாஹ் ரபீயுத்தீன் பின் ஷாஹ் வலியுல்லாஹ் முஹத்தித் திஹ்லவி அவர்களிடம் சமர்பித்தார்கள். இந்த கேள்வி -பதில்   ஒரு நூல் தொகுப்பாக"**தஹ்கீக் அல் ஹகீகா**" என்னும் பெயரில் ஹிஜ்ரி 1267ல் பம்பாயில் இருந்து வெளிவந்தது.

**அவற்றில் மூன்றின் பதில்கள் பின்வருமாறு:**

ஹழ்ரத் ஷாஹ் மக்சுஸுல்லாஹ் திஹ்லவி அவர்கள் எழுதுகிறார்கள்;

"**தக்வியத்துல் ஈமான்** பற்றிய முதல் கேள்வியின் பதிலானது - நான் அதை தஃப்பியத்துள் ஈமான் (அரபு எழுத்து faa கொண்டு)    - நான் அதனை மறுத்து **"முஈதுல் ஈமான் "** என்னும் பெயரில் எழுதிய தனிக்கட்டுரையே ஆகும்.

இஸ்மாயிலின் நூல் எமது குடும்பத்தினரின் பாரம்பரியத்திற்கு எதிரானது என்பது மட்டுமில்லாமல், நபிமார்கள் மற்றும் ரஸூல்மார்கள் காட்டித் தந்த தவ்ஹீதுக்கே எதிரானது! ஏனெனில் நபிமார்களும்,

ரஸூல்மார்களும் வந்ததன் நோக்கம் மக்களுக்கு தவ்ஹீதை கற்றுத் தந்து அதன் வழியில் நடத்திக் காட்டவே ஆகும்.

இந்த புத்தகத்தில் தவ்ஹீதின் அடையாளமோ அல்லது நபிமார்களின் ஸுன்னாஹ்வின் அடையாளமோ இல்லை. எதையெல்லாம் இவர்கள் ஷிர்க், பித்அத் என்று அடையாளமிட்டு மக்களுக்கு கற்றுத் தருகிறார்களோ, அவை நபிமார்களோ அல்லது அவர்களைப் பின்பற்றியவர்களாலோ அவ்வாறு சொல்லப்படவில்லை. இதற்கு மாற்றாக அவர்களிடம் ஆதாரம் இருந்தால், அதனை நம்மிடம் தெரிவிக்க அவர்களின் ஆதரவாளர்களுக்கு கூறுங்கள்.

நான்காவது கேள்வியின் விடை,

வஹாபியின் (அப்துல் வஹாப் நஜ்தி தமீமி) நூல் உரை என்றால், இஸ்மாயிலின் நூல் அதன் விளக்கவுரை போல் உள்ளது.

ஐந்தாவது கேள்வியின் விடை,

ஷாஹ் அப்துல் அஜீஸ் முஹத்தித் திஹ்லவி அவர்கள் பார்வை குறைபாடு காரணமாக பலவீனப்பட்டு இருந்தார்கள். இஸ்மாயிலின் நூலைப் பற்றி கேள்விப் பட்ட அவர்கள், தாம் மட்டும் சுகவீனமாக இல்லையென்றால், ராபிழி ஷியாக்களுக்கு எதிராக எழுதிய **"துஹ்பா இத்னா அஷரியா "** என்னும் மறுப்புரை போல் இஸ்மாயிலின் நூலுக்கும் மறுப்பு எழுதியிருப்பேன் என்றார்கள்.

அல்லாஹுதாலாவின் மாபெரும் கிருபையினால் நான் எழுதிய மறுப்புரை விளக்கவுரை நூலுக்கு (**தஃப்பியத்துள் ஈமான்**) மட்டுமல்லாது அதன் உரை நூலுக்கும் (**கிதாபுத் தவ்ஹீத்**) மறுப்பாக அமைந்தது.[10]

இனி நாம் இஸ்மாயில் திஹ்லவியின் சீர்திருத்த இயல்பையும் (?), அவரின் பகுத்தறியும் தன்மையையும் (?) பின்வரும் சம்பவம் மூலம் காண்போம்;

மவ்லவி அஷ்ரப் அலி தானவி எழுதுகின்றார்,

“ஷாஹ் இஷ்ஹாக் கூறுகின்றார், மவ்லவி இஸ்மாயில் 'ரபா யாதைன் ' (சலாஹ்வில் கைகளை உயர்த்துவது) என்னும் செயலை செய்ய ஆரம்பித்த பொழுது, ஷாஹ் அப்துல் அஜீஸ் முஹத்தித் திஹ்லவி அவர்களின் மாணாக்கர் மவ்லவி முஹம்மது அலி, மவ்லவி அஹ்மது அலி ஆகியோர் அன்னாரைச் சந்தித்து இதன் காரணமாக தேவையில்லாத

---

[10] அன்வார் ஏ அப்தாப் ஏ ஸதகாத் , பக்கம் 617-620, கரீம் ப்ரெஸ் ,லாகூர் , முஹம்மத் காஜி பஜ்லே அஹ்மத் லூதியான்வி நக்சபந்தி முஜத்திதி

குழப்பம் உண்டாகுமென்பதால், மவ்லவி இஸ்மாயிலை எச்சரிக்குமாறு வேண்டுகோள் விடுத்தனர்.

ஷாஹ் அப்துல் அஜீஸ் அவர்கள் தமது வயோதிகம் மற்றும் பலவீனம் காரணமாக தாம் விவாதங்களில் கலந்து கொள்வது இல்லை என்று பதில் அளித்தார்கள்.

ஷாஹ் அப்துல் காதிர் அவர்கள் ஷாஹ் அப்துல் அஜீஸ் அவர்களை சந்தித்த பொழுது, அவரிடம் இஸ்மாயில் திஹ்லவியை,பொது மக்களுக்கு குழப்பம் விளைவிப்பதால் 'ரபா யாதைன் ' என்னும் செயலை விட்டுவிடும்படி அறிவுறுத்துமாறு சொல்லப்பட்டது .ஷாஹ் அப்துல் காதிர் அவர்கள் தாம் இஸ்மாயிலுக்கு அறிவுறுத்த தயாராக உள்ளதாகவும் ,எனினும் அவர் கேட்க மாட்டார் என்று தயங்கினார் . மேலும் அந்த செயலுக்கு ஹதீதைக் கொண்டு எதிர்ப்பார் என்றும் கூறினார்.

அதனால், ஷாஹ் அப்துல் காதிர் அவர்கள் மவ்லவி முஹம்மது யாகூப் அவர்களிடம் இஸ்மாயில் திஹ்லவியை, பொது மக்களுக்கு குழப்பம் விளைவிப்பதால் 'ரபா யாதைன் ' என்னும் செயலை விட்டுவிடும்படி அறிவுறுத்துமாறு சொன்னார்கள். மவ்லவி யாகூப் அவர்கள் மவ்லவி இஸ்மாயிலிடம் இது பற்றி கூறிய பொழுது, அவர்,'மக்களிடம் குழப்பம் உண்டாவது குறித்து வருந்தினால்,' ஒரு மனிதர் சோதனையான காலத்தில் ஓர் ஸுன்னாஹ்வை உயிர்பித்தால், அவருக்கு நூறு ஷஹீதுகளின் அந்தஸ்த்து கிடைக்கும் ' என்ற ஹதீதுக்கு என்ன விளக்கம் தருவீர்கள் என்று பதில் அளித்தார். கைவிடப்பட்ட ஓர் ஸுன்னாஹ்வை உயிர்ப்பிக்கும் பொழுது பொதுமக்களிடம் எதிர்ப்பு வரத்தான் செய்யும் என்றார்.

மவ்லவி யாகூப் இஸ்மாயிலின் பதிலை ஷாஹ் அப்துல் காதிர் அவர்களிடம் கூறினார். அது கேட்ட ஷாஹ் அப்துல் காதிர் அவர்கள் கூறினார்கள், ' என்னவொரு கைசேதம்! நாம் இஸ்மாயில் ஒரு மார்க்கம் கற்றறிந்த அறிஞர் ஆகிவிட்டார் என நினைத்தோம். ஆனால் அவர் ஒரு (சுலபமான) ஹதீதின் பொருளைக் விளங்காமல் உள்ளார். அவர் குறிப்பிடும் ஹதீத் எந்த செயல் ஸுன்னாஹ்விற்கு மாறுபடுகின்றதோ அதற்குத்தான். 'ரபா யாதைன் ' என்னும் செயலை பொறுத்தவரை நாம் ஸுன்னாஹ்விற்கு மாறாக எதையும் செய்யவில்லை. எவ்வாறு கைகளை உயர்த்துவதும் ஸுன்னாஹ்வின் அடிப்படையில் உள்ளதோ அதைப்போன்றே கைகளை உயர்த்தாமல் இருப்பதும் ஸுன்னாஹ்வின் அடிப்படையில் தான். "[11]

---

[11] அன்வார் ஏ தலாதா , ஹிகாயத் 73, இம்தாதுல் குராபா , ஸஹ்ரான்பூர் , ஹிஜ்ரி 1370 , அஷ்ரப் அலி தான்வி

இஸ்லாமிய கொள்கை மற்றும் பிக்ஹ் உடைய மஸாயில்களில் இஸ்மாயில் திஹ்லவியின் தவறுகளும், மாற்றமான போக்கும் உலமாக்களிடையே சர்சைகளை ஏற்படுத்தின. குறிப்பாக 'இம்கான் ஏ காதிப் ' மற்றும் 'இம்கான் ஏ நசீர் ஏ முஹம்மதி ' ஆகியவை கலகத்தை ஏற்படுத்தின.

அஹ்லுஸ் ஸுன்னத் வல் ஜமாத்தின் உலமாக்கள் இந்த விஷயங்களை தெளிவாகவும், துல்லியமாகவும், விரிவாகவும் விளக்கி உள்ளனர். இஸ்மாயில் திஹ்லவியின் நூலில் சர்ச்சைக்குறிய கருத்துக்களைக் கொண்ட அந்த வாசகம் பின்வருமாறு,

"அந்த அரசனின்(அல்லாஹ்வின் ) மகிமை எப்படிபட்டதெனில் குன் (ஆகுக என்னும் கட்டளை ) என்னும் ஒரு நோடிப் பொழுதில் கோடிக்கணக்கான நபிமார்கள் , அவ்லியாக்கள் ,ஜின்கள் ,மலக்குகள் , முஹம்மது மற்றும் ஜிப்ராஈல் ஆகியோரை உருவாக்க முடியும் "
**[நூல்- தக்வியத்துள் ஈமான், பக்கம் 37]**

அல்லாமா பஜ்லே ஹக் கைராபாதி (ஷாஹ் அப்துல் அஜீஸ் முஹத்தித் திஹ்லவி அவர்களின் மாணவர்), இந்த சிந்தனையை ஷரியத்திற்கு மாற்றமானது என்று மறுத்தார்கள்.

அவர்கள் எழுதினார்கள், குர்ஆன் ஹதீத் உடைய நஸ்ஸான (அறுதியான) ஆதாரங்களைக் கொண்டு கண்மணி நாயகம் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள் தான் இறுதி நபி, அவர்களுக்கு பின் நபியோ, ரசூலோ வரப்போவதில்லை. நபிகள் நாயகம் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களைப் போல் இன்னொருவர் வருவார் என்பது சாத்தியமற்ற ஒன்று, இன்னும் ஷரீயத் எதையெல்லாம் சாத்தியமற்ற அம்சங்கள் என்று கூறுகின்றதோ அதில் நின்றும் உள்ளவை. நபிகள் நாயகம் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களுக்குப் பின் ஒரு நபி வருவார் என்று நம்பிக்கை கொள்வது அல்லாஹுத்தஆலா குர்ஆனில் தான் கூறியதற்கு மாற்றமாக ஒன்றை செய்தான் என்று அவசியப்படுத்துவது போல் ஆகும், அதாவது அல்லாஹுத்தஆலா பொய் உரைத்தான் என்று. பொய் உரைப்பது ஒரு குறைபாடு இன்னும் அல்லாஹுத்தஆலா குறைபாடுகளை கொண்டிருப்பது இயலாதவொன்று. இதுபற்றிய மேலதிக விவரங்களுக்கு அல்லாமா பஜ்லே ஹக் கைராபாதி அவர்கள் எழுதிய **'தஹ்கீக் அல் பத்வா பீ இப்தால் அல் தகுவா '**[12] என்னும் நூலைக் காணவும்.

[12] மக்தபா காதிரிய்யா,லாகூர், மவ்லானா முஹம்மத் அப்துல் ஹக்கீம் ஷரீப் காதிரி

இந்த புத்தகம் 'அல்லாஹ் பொய் சொல்லுவது சாத்தியம்' மற்றும் 'முஹம்மது (ஸல்லல்லாஹுஃ அலைஹி வஸல்லம்)  அவர்களைப் போல் இன்னொருவர் வருவது சாத்தியம் ' என்ற கொள்கைகளை தெளிவாக ஆதாரங்களுடன் மறுத்து அஹ்லுஸ் ஸுன்னத் வல் ஜமாத்தின் கொள்கைகளை நிலைநாட்டியது.

இந்த விஷயங்கள் சம்பந்தமாக இஸ்மாயில் திஹ்லவி ஒரு தனிக்கட்டுரை **'யக் ரோஜா'** என்னும் பெயரில் எழுதினார் .இதற்கு அவரின் மாணவர் மவ்லவி ஹைதர் அலி டோங்கி உறுதுணையாக இருந்தார்.

இதற்கு மறுப்பளிக்கும் விதமாக அல்லாமா பஜ்லே ஹக் கைராபாதி அவர்கள் பார்ஸி மொழியில் எழுதிய நூல் **'இம்தினாஉன் நசீர் '.** இந்த நூலை ஜூஅன்புரைச் சேர்ந்த அல்லாமா செய்யித் சுலைமான் அஷ்ரப் அவர்கள் (அதிபர், இஸ்லாமிக் சயின்ஸ், அலிகர் பல்கலைக்கழகம்) 1908ல் வெளியிட்டார்கள்.

மவ்லானா அஹ்மத் ஹசன் கான்பூரி (முப்தி முஹம்மது லுத்புல்லாஹ் அலிகரி அவர்களின் மாணவர் மற்றும் ஹாஜி ஷைகு இம்தாதுல்லாஹ் முஹாஜிர் மக்கி அவர்களின் கலீஃபா)  இந்த தலைப்புகளில் இஸ்மாயில் திஹ்லவிக்கு மறுப்பாக எழுதிய நூல் **'தன்ஸீஹ் அல் ரஹ்மான் அன் ஷீயத் அல் காதிபி வ அல் நுக்சான் '.**

இதே தலைப்பில் மவ்லானா ஹக்கீம் செய்யித் பரகத் அஹ்மத் டோங்கி, இஸ்மாயில் திஹ்லவிக்கு மறுப்பாக **' அல் சம்சம் அல் காதிப் லிரா அசி அல் முப்தாரி அலல்லாஹி அல் காதிப் '** என்னும் நூலை எழுதினார்.

முப்தி முஹம்மது அப்துல்லாஹ் டோங்கி, இஸ்மாயில் திஹ்லவிக்கு மறுப்பாக **'இஜாலாத் அல் ரகீப் பீ இம்தினாயி காதிப் அல் வாஜிப் '** என்னும் நூலை எழுதினார்.

இது போன்ற எழுத்துகளின் மூலம் இம்மக்கள் அல்லாஹ் பொய் சொல்லுவது சாத்தியம் என்ற வஹாபிய கொள்கையை மிகச் சிறப்பாக எதிர்த்தனர்.

இனி அக்காலத்தில் உண்டான சச்சரவுகளை பற்றிய விஷயங்களை சற்றே ஒதுக்கிவிட்டு சற்று முன்னே நகரலாம்.

மிகப் பிரபலமான நக்ஷபந்தி முஜத்திதி ஷைகும் அறிஞருமான மவுலானா அபுல் ஹசன் ஜைத் பாரூக்கி திஹ்லவி அவர்களின் தமது காலத்தில் உண்டான பிளவுகளைப் பற்றிய கூற்று சிந்திக்கத்தக்கவை,

“முஜத்திதே அல் பதானி ஷைகு அஹ்மத் பாரூக்கி சிர்ஹிந்தி அவர்களின் காலம் தொட்டு ஹிஜ்ரி 1240 (1825ஆம் ஆண்டு) வரை இந்திய முஸ்லிம்கள் இரு பிரிவாக பிளவுபட்டு இருந்தனர், **அஹ்லுஸ் ஸுன்னத் வல் ஜமாஅத்** மற்றும் **ராபிழி ஷியாக்கள்.**

அதன் பின்னர் இஸ்மாயில் திஹ்லவி தோன்றினார், இவர் ஷாஹ் வலியுல்லாஹ் அவர்களின் தந்தைவழி பேரர். மற்றும் ஷாஹ் அப்துல் அஜீஸ், ஷாஹ் ரபிய்யுத்தீன், ஷாஹ் அப்துல் காதிர் ஆகியோரின் சகோதரர் மகன்.

இவர் முஹம்மத் பின் அப்துல் வஹ்ஹாப் நஜ்தியின் சிந்தனைகளால் கவரப்பட்டு, இப்னு அப்துல் வஹாபின் நூலான **'ரத்துல் இஷ்ராக்'** கை வாசித்து அதன் கருத்துக்களால் ஈர்க்கப்பட்டார்.

இவர் '**தக்வியத்துல் ஈமான்'** என்னும் நூலை உர்துவில் எழுதினார். இந்த நூல் மார்க்க விஷயங்களில் தடங்களற்ற சுதந்திரத்தை உண்டாக்கும் காலத்தை தொடங்கி வைத்தது. சிலர் கைர் முகல்லிதுகலாயினர், சிலர் வஹாபிகளாயினர், சிலர் அஹ்லே ஹதீத் என்று தங்களை அழைத்தனர் சிலர் ஸலபிகள் என்று பிரிந்தனர்.

முஜ்தஹித் இமாக்களுக்கு மக்கள் அளித்த கண்ணியம் வெகுவாக குறைந்தது, மார்க்க விஷயங்களில் சாதாரண அறிவும் கற்றலும் உடையவர்கள் இமாம்களாயினர்.

மிகப்பெரும் சோகம் என்னவெனில் தவ்ஹீதின் பெயரால் கண்மணி நாயகம் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களை மக்கள் நிந்தனை செய்யத் தொடங்கினர். இது போன்ற சிதைந்த கருத்தாக்கங்கள் ஹிஜ்ரி 1240 (1825 ஆம் ஆண்டு) ரபிய்யுல் ஆகிர் மாதத்திற்கு பின் தோன்றின . "[13]

1871ஆம் ஆண்டு பதாயூனில் உள்ள ஷைக்கோபூர் என்னும் ஊரில் வைத்து ஒரு விவாதம் நடந்தது. **முஹிப்பிர் ரசூல் தாஜுல் புஹூல் அல்லாமா அப்துல் காதிர் காதிரி பரக்கத்தி பதாயூனி** (மறைவு 1319 ஹிஜ்ரி - 1901 ஆம் ஆண்டு) மற்றும் **மவ்லானா அமீர் அஹ்மத் பின் மவ்லவி அமீர் ஹசன் சஹசவாணி** (மறைவு ஹிஜ்ரி 1306 - 1889 ஆம்

[13] மவ்லானா இஸ்மாயில் திஹ்லவி அவ்ர் தக்வியத்துள் ஈமான் , பக்கம் 9, ஷாஹ் அபுல் கைர் அகாடமி ,மவுலானா அபுல் ஹசன் ஜைத் பாரூக்கி திஹ்லவி

ஆண்டு), ' இம்கான் ஏ கிஜ்ப் (அல்லாஹ் பொய் சொல்லுவது சாத்தியம்) ', ' இம்கான் ஏ நசீர் (முஹம்மது (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களைப் போல் இன்னொருவர் வருவது சாத்தியம்)' ஆகிய தலைப்புகளில்.

மவ்லானா நசீர் அஹ்மத் சஹசவாணி (மறைவு ஹிஜ்ரி 1299 - 1881 ஆம் ஆண்டு) இந்த விவாதத்தை பதிவு செய்துள்ளார்.[14]

மவ்லானா அமீர் அஹ்மத் மற்றும் மவ்லானா நசீர் அஹ்மத் இருவரும் மவ்லானா முஹம்மது அஹ்சன் நானொத்வியிடம் சில காலம் கழித்தவர்கள் என்பது குறிப்பிடத்தக்கது.

இப்னு அப்பாஸ் உடைய அதரை ஆதாரமாகக் கொண்டு , அவர்கள் ஆதம் (அலைஹிஸ்ஸலாம் ) ,நூஹ் (அலைஹிஸ்ஸலாம் ), இப்ராஹீம் (அலைஹிஸ்ஸலாம் ),மூஸா (அலைஹிஸ்ஸலாம் ),ஈஸா (அலைஹிஸ்ஸலாம் ) ,முஹம்மது (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் ) போன்று இன்னொருவர் வருவது சாத்தியம் என்ற நம்பியதோடு மட்டுமல்லாமல் அதுதான் யதார்த்தமான நிலையும் கூட என்று அவ்விருவரும் நம்பினார்கள் .

பேராசிரியர் அய்யூப் காதிரி (கராச்சி) அவர்கள் எழுதுகின்றார்கள்,

“முக்கியமாக சுட்டிக் காட்ட வேண்டிய விஷயம் யாதெனில் பரேலி பதாயூனைச் சார்ந்த உலமாக்கள், மவ்லானா முஹம்மது அஹ்சன் நானொத்வியின் கண்ணோட்டத்தை கடுமையாக எதிர்த்தனர், முரண்பட்டனர். பரேலியின் உலமாக்களில் முன்னோடியாக எதிர்த்தவர்கள் மவ்லானா நகீ அலி கான், பதாயூன் உலமாக்களில் முன்னோடியாக எதிர்த்தவர்கள் மவ்லானா அப்துல் காதிர், மவ்லானா பஜ்லே ரஸூல் பதாயூனி அவர்களின் மகனார். "[15]
மவ்லானா அப்துல் ஹக் கைராபாதி, மவ்லானா செய்யித் ஹுசைன் முஹத்தித் ராம்பூரி, மவ்லானா அப்துல் அலி ராம்பூரி, முப்தி நூருந்நபி ராம்பூரி மற்றும் அஹ்லுஸ் ஸுன்னாஹ்வின் ஏனைய உலமாக்கள் இப்னு அப்பாஸ் உடைய அதரை, அது குர்ஆனுக்கு எதிராக உள்ளதாக நிரூபணம் செய்ததோடு அது தவறான கொள்கை என எதிர்த்தனர்.

ஹழ்ரத் முப்தி இர்ஷாத் ஹுசைன் ராம்பூரி அதில் நம்பிக்கைக் கொள்வது அஹ்லுஸ் ஸுன்னாஹ்வின் கொள்கைக்கு முரணானது என எழுதினார்கள். ஏனெனில் 'காத்தமுன் நபிய்யீன்' என்றால் இறுதி நபி -

[14] முனாஜாரா ஏ அஹ்மதியா ,ஹிஜ்ரி 1289 பதிப்பு
[15] மவ்லானா முஹம்மது அஹ்சன் நானொத்வி , பக்கம் 94, மஃத்பா உத்மானியா , பேராசிரியர் முஹம்மது அய்யூப் காதிரி

அதாவது முஹம்மது (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள் தான்.[16]

**கத்மே நுபுவ்வத், நஸீர் ஏ முஹம்மதி** மற்றும் **இப்னு அப்பாஸ் அவர்களுடைய அதர்** குறித்த விவாதங்கள் தொடர்ந்தன, இவ்விவகாரங்களுக்கு பதில் அளிக்கும் விதமாக மவ்லவி முஹம்மத் காஸிம் நானோத்வி தமது நூலான '**தக்தீருன் நாஸ்**' ல் பின்வருமாறு எழுதுகிறார்,

"சாமானிய மக்கள், பொதுமக்கள் “காத்தமுன் நபீயீன்” என்பதன் பொருள் நபிகள் நாயகம் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களின் காலம் எல்லா நபிமார்களுக்கும் பிந்தியது என்றும், அவர்கள் தாம் இறுதி நபி என்றும் அர்த்தம் கொள்வர்.எனினும் விஷயம் அறிந்தவர்களுக்கு .பிந்தி வருவதிலோ அல்லது இறுதி நபி என்பதிலோ எந்த விசேஷமும் இல்லை என்று அறிவர்.

அண்ணலம் பெருமான் முஹம்மது (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களுக்கு பின்னர் ஒரு நபி பிறந்தாலும் அது முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தான் இறுதியானவர்கள் என்பதில் எந்த விளைவையும் உண்டாக்காது .எனவே அவர்கள் காலத்தில் வேறொரு நபி வேறு ஒரு கிரகத்தில் வருவதிலோ அல்லது இதே கிரகத்தில் வருவதிலோ எந்த வேறுபாடும் உண்டாகாது. "

மவ்லானா முஹம்மது பாசிலுக்கு எழுதிய கடிதத்தில் மவ்லவி காசிம் நானோத்வி பின்வருமாறு எழுதுகிறார்,

“காத்தமுன் நபீயீன்” என்பதன் பொருளை எழுத்தியல் பொருளாக எடுப்பவர்கள், நபிகள் நாயகம் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களின் நுபுவ்வத் காலம் எல்லா நபிமார்களுக்கும் பிந்தியது என்றும் அவர்கள் தாம் இறுதி நபி என்று பொருள் கொள்வர். எனினும் இந்த விஷயம் புகழோ, தீங்கோ அளிக்கக்கூடிய ஒன்றாக இல்லை என்பதை நீங்கள் அறிவீர்கள். " [17]

மவ்லவி அஷ்ரப் அலி தான்வி எழுதுகின்றார்,
**"**மவ்லவி காசிம் நானோத்வி தக்தீருன் னாஸ் நூலை எழுதிய பொழுது ஒட்டுமொத்த இந்தியாவிலும் மவ்லவி அப்துல் ஹை என்பவரைத் தவிர வேறு யாரும் ஆதரிக்கவில்லை”[18]

---

[16] தன்பீஹ் அல் ஜிஹால் , பக்கம் 26, முப்தி ஹாபிஸ் பக்ஷ் அனோல்வி
[17] காசிம் உல் உலூம் ,பக்கம் 55 , முதல் கடிதம்
[18] அல் இபாதாத் அல் யவ்மியா , பக்கம் 580, தேவ்பந்த் ,அஷ்ரப் அலி தான்வி

மவுலானா முஹம்மது ஷாஹ் பஞ்சாபி, மவ்லானா பஜ்லே மஜீத் பதாயூனி, மவ்லானா ஹிதாயத் அலி பரேல்வி, மவ்லானா பஸீஹுத்தீன் பதாயூனி, மற்றும் ஷைகு முஹம்மது தான்வி ஆகியோர் மவ்லவி காசிம் நாணோத்வியின் **'தக்தீருந் நாஸ் '** நூலுக்கு எதிராக நூற்களை எழுதி அவற்றை கடுமையாக எதிர்த்தனர்.

ஹழ்ரத் மவ்லானா அப்துல் சமீ பேதில் ராம்பூரி, ஷைகு ஹாஜி இம்தாதுல்லாஹ் முஹாஜிர் மக்கி (ரஹ்மத்துல்லாஹி அலைஹி) அவர்களின் கலீபா, மிகப் பிரபலமான நூலான **'அன்வாரே சாதியா '** என்னும் நூலை எழுதினார்.

இந்த நூலுக்கு பதில் அளிக்கும் விதமாக மவ்லவி கலீல் அஹ்மத் அம்பேத்வி ஸஹ்ரான்பூரி (பிறப்பு - ஹிஜ்ரி 1269 - 1852 ஆம் ஆண்டு) (மறைவு ஹிஜ்ரி 1346 - 1927 ஆம் ஆண்டு) **'பராஹீனே காத்தியா'** என்னும் நூலை எழுதினார்.

இந்த நூலுக்கு மவ்லவி ரஷீத் அஹ்மத் கங்கோஹி அதன் கருத்துக்களை ஏற்று ஒப்புதல் வழங்கினார். இந்த நூலில் நபிகள் நாயகம் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களின் புனிதமிகு அறிவாற்றலை, சபிக்கப்பட்ட ஷைத்தான் இப்லீசுடன் இஸ்லாமியர்களின் மனம் நோகும் வகையில் ஒப்பீடு செய்துள்ளார்.

கலீல் அஹ்மத் எழுதுகின்றார்,

“இறுதி முடிவு: ஷைத்தான் மற்றும் மலக்குல் மவ்த்து ஆகியோருடைய நிலையை பார்த்த பின்னர் சிந்திக்க வேண்டிய விஷயம் யாதெனில், அதைப்போலவே உலகமனைத்தையும் உள்ளடக்கிய பேரறிவு நபிகள் நாயகம் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களுக்கு உண்டென எந்தவிதமான ஆவணப்படுத்தப்பட்ட ஆதாரமும் இல்லாமல், வெறுமெனே தவறான ஒப்புமை கொண்டு மட்டும் நிரூபிக்க முயல்வது - இது ஷிர்க் இல்லையென்றால், இது ஈமானின் எந்த பகுதி?

ஏனெனில் அத்தகைய விசாலமான அறிவு ஷைத்தான் மற்றும் மலக்குல் மவ்த்து ஆகியோருக்கு உண்டென்பது அறுதிப்படுத்தப்பட்ட ஆதாரங்கள் மூலம் நிரூபிக்கப்பட்டுள்ளது (நுஸுஸ் கதிய்யாஹ்). அண்ணலம் பெருமான் முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களும் அதேபோன்ற ஆழமான அறிவுடையவர்கள் என்று என்று நிரூபிக்கும் குரான் ஹதீஸ் உடைய அறுதிப்படுத்தப்பட்ட ஆதாரம் எங்குள்ளது? எல்லா அறுதிப்படுத்தப்பட்ட ஆவணங்களை மறுத்து இந்த ஒரு ஷிர்க்குடைய நம்பிக்கையை நிலைநிறுத்தவதற்கு? ”.

"**பராஹீனே காத்தியா**" நூல் எழுதப்பட்டது ஹிஜ்ரி 1303ல் (1885ஆம் ஆண்டு). இந்த நூலைக் கொண்டு பெரும் அதிருப்தி ஏற்பட்டது.

அஹ்லுஸ் ஸுன்னத் வல் ஜமாத்தின் உலமாக்கள் இதை எதிர்த்தனர். ஹிஜ்ரி 1306ல் (1888ஆம் ஆண்டு), பஞ்சாபின் பஹவல்பூர் நகரில் ஓர் விவாதம் நடந்தது, பஹவல்பூரின் நவாப் நவாப் முஹம்மது சாதிக் அப்பாஸியின் ஏற்பாட்டில். இந்த நகரில் தான் அப்பொழுது கலீல் அஹ்மத் அம்பேத்வி பணி செய்து வந்தார்.

மவ்லவி மஹ்மூது ஹசன் தேவ்பந்தி மற்றும் கலீல் அஹ்மத் அம்பேத்வி "**பராஹீனே காத்தியா**" நூலை ஆதரித்தும், அஹ்லுஸ் ஸுன்னத் வல் ஜமாத்தின் சார்பாக மவ்லானா குலாம் தஸ்தகீர் கஸூரி வாதிட்டார்கள். ஷைகுல் மஷாயிக் ஷாஹ் குலாம் பரீத் அவர்கள் இந்த விவாதத்தின் நீதிபதியாக இருந்தார்கள்.

இந்த முழுமையான விவாதமும் "**தக்தீஸ் உல் வகீல் அன் தவ்ஹீன் உர் ரஷீத் வ கலீல்**" என்று நூல் வடிவில் வெளியிடப்பட்டுள்ளது.

இது தான் '**அஹ்லே தேவ்பந்த்**' க்கு எதிரான முதல் பத்வா. மவ்லானா குலாம் தஸ்தகீர் கஸூரி ஹாஷ்மி நக்ஷ்பந்தி அவர்களால் வெளியிடப்பட்டது.

இந்த விவாதம் முழுக்க முழுக்க எழுத்துப்பூர்வமானது, மேலும் மவ்லானா குலாம் தஸ்தகீர் அவர்களின் வாதமானது,

"என்னுடைய மறுப்பானது நீங்கள் படைப்புகளில் மிகவும் அறிவார்ந்தவர்களான நபிகள் நாயகம் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களின் விசாலமான அறிவை மறுத்ததோடு, அவர்களின் அறிவை ஷைத்தானை விடவும் குறைவானது என்று கூறியுள்ளீர்கள். இது மிகவும் மோசமான அவமரியாதை ஆகும்" [19]
**[நூல் -தக்தீஸ் உல் வகீல், பக்கம் 93]**

[ரஷீத் அஹ்மத் கங்கோஹி , கலீல் அஹ்மத் அம்பேத்வி ஆகியோரின் ஷைகான] ஹாஜி இம்தாதுல்லாஹ் முஹாஜிர் மக்கி (ரஹ்மத்துல்லாஹி அலைஹி ) ,மற்றும் [மத்ரஸா ஸவ்லாதியாவின் நிறுவனரும் ,பாக்கியத்துஸ் ஸாலிஹாத்தின் நிறுவனர் ஷம்சுல் உலமா அஃலா ஹஸ்ரத் அப்துல் வஹ்ஹாப் அல் காதிரி (ரஹ்மத்துல்லாஹி அலைஹி ) அவர்களின் ஆசிரியர்களில் ஒருவரான] ஷைகு ரஹ்மத்துல்லாஹ் கீரான்வி (ரஹ்மத்துல்லாஹி அலைஹி ) அவர்களும் அஹ்லுஸ் ஸுன்னத் வல் ஜமாத்தின் உலமாக்களை ஆதரித்து , மவ்லானா குலாம்

---

[19] தக்தீஸ் உல் வகீல், பக்கம் 93

தஸ்தகீர் அவர்களின் நிலைப்பாட்டை ஒப்புக்கொண்டு அவரது நூலான **தக்தீஸ் உல் வகீல் க்கு** ஒப்புதல் வழங்கி கையெழுத்திட்டனர் .

மவ்லவி ரஷீத் அஹ்மத் கங்கோஹி, கலீல் அஹ்மத் அம்பேத்விக்கு ஆதரவாக கையெழுத்திட்டுள்ளதை கண்ட ஷைகு ரஹ்மத்துல்லாஹ் கீரான்வி (ரஹ்மத்துல்லாஹி அலைஹி) அவர்கள் கூறினார்கள், " நான் மவ்லவி ரஷீத் அஹ்மத் 'ரஷீத் ' என்று நினைத்தேன், ஆனால் அவர் அதற்கு மாற்றாக உருவாக்கியுள்ளார். அவர் கண்மணி நாயகம் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களின் அறிவு ஷைத்தானை விட குறைவு என்று நிரூபிக்க மிகக் கடினமாக முயன்றுள்ளார் .இன்னும் அதற்கு மாற்றமான நம்பிக்கை கொள்வது ஷிர்க் என்று கூறுகின்றார்"[20]

ஹிஜ்ரி 1319ல் (1901ஆம் ஆண்டு) மவ்லவி அஷ்ரப் அலி தான்வி 'இல்முல் கைப் ' சம்பந்தமாக ஒரு கேள்விக்கு விடையளித்து **'ஹிப்ளுள் ஈமான்** ' என்னும் நூலை எழுதினார்.

இந்த நூலில்,அஷ்ரப் அலி தான்வி நாயகம் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் ) அவர்களின் மேலான அறிவை ,பைத்தியக்காரர்களுடனும் ,மிருகங்களுடனும் ஒப்பிட்டு , பெருமானார் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் ) அவர்களுக்கு வழங்கப்பட்ட மறைவான அறிவைக் கொண்டு எந்த தனிச் சிறப்புமில்லை என்று கூறியுள்ளார்.

அதன் அசல் கூற்று பின்வருமாறு,
'இன்னும் ஜைத் கூறுவது போன்று நாயகம் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களுக்கு வழங்கப்பட்ட மறைவான அறிவு என்னும் பண்பை சாட்டுவது உண்மையென்றால், கேட்க வேண்டிய கேள்வியாதெனில்,ஜைத் எதைக் குறிப்பிடுகின்றார் . அது மறைவான அறிவில் (இல்முல் கைப்) ஒரு பகுதியையா அல்லது முழுமையாகவா? ஜைத் அதில் ஒரு பகுதியை குறிப்பிட்டுகின்றார் என்றால், நாயகம் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களின் மறைவான இல்மை கொண்டு என்ன சிறப்பு உள்ளது. இது மாதிரியான மறைவான இல்ம் எல்லோருக்கும் உள்ளது,ஜைத் அம்ர் -க்கும் உள்ளது , இன்னும் குழந்தைகள் ,பைத்தியக்காரர்கள் ,மிருகங்கள் மற்றும் நான்கு கால் பிராணிகளுக்கும் உள்ளது '.

**ஹழ்ரத் செய்யித் முஹம்மத் ஜீலானி ஹைதராபாதி** அவர்களின் பேரர் **செய்யித் நஸீருத்தீன்,செய்யித் மொய்னுதீன்** அவர்களின் மகனார் அஷ்ரப் அலி தான்வியின் இந்த கூற்றுக்கு தமது கண்டனத்தை பின்வருமாறு தெரிவிக்கிறார்கள் ,

---

[20] தக்தீஸ் உல் வகீல், பக்கம் 419

"சிலர் அஷ்ரப் அலி தான்வி எழுதிய **'ஹிப்ளுள் ஈமான்'** நூலை   எனது பாட்டனாரிடம் காண்பித்து அதைப் பற்றி கேட்டார்கள். அவர்கள் அந்த நூலை வாசித்து 'மவ்லவி அஷ்ரப் அலி இல்முல் கைப் விஷயமாக மிகவும் அவமரியாதையாக எழுதியுள்ளார் என்றார்கள் ".

சில நாட்கள் கழித்து ஹைதராபாத்தின் மக்கா மஸ்ஜிதில் அஷ்ரப் அலி தான்வி இருந்த பொழுது, எனது பாட்டனார் அவரிடம் எழுந்து சென்று தமது அருவருப்பை வெளிப்படுத்தி 'இந்த பத்தியில் குப்ர் உடைய வாடை உள்ளது என்றார்கள் '.

சில நாட்கள் கழித்து உலமாக்களின் ஒருங்கிணைப்புக் கூட்டம் மவ்லானா ஹாபிழ் முஹம்மத் அஹ்மத் (மவ்லவி காசிம் நாணோத்வியின் மகனார்) அவர்களின் வீட்டில் நடைபெற்றது. அவர் எனது பாட்டனார் மீது அன்பு கொண்டவர் என்பதால் அந்த ஒருங்கிணைப்புக்கு எனது பாட்டனாரையும் அழைத்தார். அங்கு உலமாக்கள் **'ஹிப்ளுள் ஈமான்'** நூல் பற்றி விவாதித்தனர். எனது பாட்டனார் இது விஷயமாக தமது அருவருப்பை வெளிப்படுத்தி, இதைப் பற்றி ஓர் பத்வா வெளியிட்டார்கள்.

இதன் பின்னர் சில நாட்கள் கழித்து கண்மணி நாயகம் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களை கனவில் கண்டார்கள். நம் உயிரினும் மேலான நபிகள் நாயகம்  (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள் அந்த நூலுக்கு மறுப்பு தெரிவித்ததைக் கொண்டு சந்தோசம் அடைந்து, அதை 'அக்பாஹ் ' என்றும் கூறினார்கள்.  நபிகள் நாயகம்  (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள், 'நான் உம்மை கொண்டு மகிழ்வுறுகின்றேன் .உமக்கு என்ன வேண்டும் என்று கேட்டார்கள்'? எனது பாட்டனார் இனி தமது இறுதிகாலம் வரை மதீனாவில் இருந்து அங்கேயே அடக்கம் பெற விரும்பினார்கள்.அவரது விருப்பம் ஏற்றுக்கொள்ளப்பட்டது, அன்னார் மதீனா ஷரீபிற்கு ஹிஜ்ரத் செய்து, ஏறத்தாழ பத்தாண்டு காலம் அங்கு கழித்து ஹிஜ்ரி 1364ல் மரணம் எய்தினார்கள்.[21]

ஹழ்ரத் மவ்லானா அபுல் கைர் நக்ஷபந்தி முஜத்திதி திஹ்லவி அவர்கள் சில காலம் கோதி இலாஹி பக்ஷ், மீரட் நகரில் வசித்தார்கள். அந்த சமயத்தில் ஹாபிழ் முஹம்மது அஹ்மது, மவ்லவி காசிம் நாணோத்வி தேவ்பந்தியின் மகன் மற்றும் அஷ்ரப் அலி தான்வி ஆகியோர் அவரது ஓர் அமர்வுக்கு வந்து அன்னாரை சந்தித்தனர்.

---

[21] மகாமத் ஏ கைர் , பக்கம் 616, ஷாஹ் அபுல் கைர் அகாடமி ,தில்லி

மவ்லானா குலாம் தஸ்தகீர் கசூரி அவர்களின் ஆதரவாளர் மவ்லவி அஷ்ரப் அலி தான்வியின் **'ஹிப்ளுள் ஈமான்'** நூலின் கருத்துக்களை வாசித்துக் காண்பித்தார். ஹழ்ரத் ஷாஹ் அபுல் கைர் திஹ்லவி அவர்கள் அதனை முற்றிலும் வெறுப்பூட்டும் ஒன்றாக கண்டு ' இது தான் நீங்கள் செய்யும் மார்க்க சேவையா? உங்களின் முன்னோர் எமது பாதையில் இருந்தனர். இதை ஏன் எதிர்த்தீர்கள்? என்று வினவ, அஷ்ரப் அலி தான்வி 'நான் இதன் விளக்கத்தை வேறொரு புத்தகத்தில் எழுதியுள்ளேன்' என்றார். ஷாஹ் அபுல் கைர் கூறினார்கள் 'பலதரப்பட்ட மக்கள் இதன் காரணமாக ஹக்கை விட்டு வெளியேறிவிட்டனர். உமது விளக்கத்தின் தேவை என்ன எஞ்சியுள்ளது? 'என்றார்கள்.[22]

முஸ்லீம்களிடையே பிரிவினையின் ஆரம்பமும், முடிவும் அனைவரும் அறியும் வகையில் பளிங்கு கண்ணாடி போல் உள்ளது.

முஹம்மது ஹுசைன் (ரயீஸ் நஹ்டோர், ஜில்லா பீஜ்னோர்) அவர்கள் எழுதுகிறார்கள்,

“இஸ்மாயில் திஹ்லவி தமது ஆதரவாளர்களுடன் தில்லியில் இருந்து லக்னோ வந்து தமது கொள்கைகளை பரப்ப ஆரம்பித்தார். அந்த சமயத்தில் தான் மவ்லானா அப்துர் ரஹ்மான் விலாயதி அவர்கள் லக்னோவில் இருந்து வந்தார்கள். அவர் தமது கராமத்துகளின் காரணமாக பிரபலமாகியிருந்தார். இஸ்மாயில் திஹ்லவி இந்த காலத்தில் விவாதங்களைத் தவிர்த்து வந்தார். லக்னோவை விட்டு கிளம்பும் முன் இஸ்மாயில் திஹ்லவி லக்னோவின் உலமாக்கள் வழிதவறிவிட்டனர் என்று கூறினார். அவர் கல்கத்தாவில் இருந்து திரும்பி வந்து இந்த லக்னோவின் வழிதவறியவர்க்கு எதிராக ஜிஹாத் புரிவேன் என்றார். இறைவனின் நேசர் மவ்லானா அப்துர் ரஹ்மான் விலாயதி அவர்கள் கூறினார்கள் 'மகனே, இத்தகைய எண்ணம் உள்ள எவரும் திரும்புவதில்லை' ".[23]

செய்யித் அஹ்மத் ரேபரேலியுடைய கொள்கைகளும், இஸ்மாயில் திஹ்லவியின் எழுத்துக்களும் தமது முன்னோர்களின் நம்பிக்கைகளுக்கும்,ஷாஹ் வலியுல்லாஹ் முஹத்தித் திஹ்லவி அவர்களின் கொள்கைகளுக்கும் நேர்மாறாக வழி தவறி சென்றன .

இதன் விளைவுகளை சுட்டிக்காட்டி மவ்லானா உபைதுல்லாஹ் சிந்தி தமது பார்வையை தெளிவாக வெளிப்படுத்துகிறார்,

---

[22] பஸ்மே கைர் அஸ் ஸைத் , பக்கம் 11,ஷாஹ் அபுல் கைர் அகாடமி ,தில்லி
[23] பர்யாத் அல் முஸ்லிமீன் , ஹிஜ்ரி 1308/ 1890ஆம் ஆண்டு , முஹம்மது ஹுசைன் பஜ்நோரி

“காலம் செல்ல செல்ல, மூல கொள்கையில் இருந்து பிரிந்து சென்றதன் காரணமாக, முஸ்லிம்களின் தேசிய இயக்கமாக மாறியிருக்க வேண்டிய வலியுல்லாஹ் இயக்கம் கொள்கை பிரிவினையின் தளமாக மாறிப் போனது. இந்த பிரிவினை செய்யித் அஹ்மத் ரேபரேலி உடன் தொடங்கியது. இந்த இயக்கத்தின் மற்றோரு பிரிவான தேவ்பந்த் இயக்கமும் அதே முடிவை அடைந்தது. இன்றும் பெருவாரியான மக்கள் பரேலவிகளாக இருப்பதோடு இவ்விரு இயக்கங்களையும் குப்ர் கொள்கைகளை கொண்டவர்கள் என்றே கருதுகின்றனர். "[24]

இந்தியாவில் ஹிஜ்ரி 1240/1825ஆம் ஆண்டுக்கு பின் உண்டான இஸ்லாமிய பிரிவினையின் காரணமும், அதன் காரணகர்த்தாக்களும், அதன் பின் புலமும் விவரிக்கப்பட்டுள்ளது.

அக்காலத்தில் வட இந்தியாவைச் சார்ந்த அஹ்லுஸ் சுன்னத் வல் ஜமாத்தை சார்ந்த செல்வாக்கு நிறைந்த உலமாக்களின் சுருக்கமான பட்டியல் பின்வருமாறு,

**ஹிஜ்ரி 13ஆம் நூற்றாண்டு:**

- அல்லாமா அப்துல் அலி பிரங்கி மஹல்லி லக்னவி (1144-1235 ஹிஜ்ரி )
- ஷாஹ் முஹம்மது அஜ்மல் இலாஹாபாதி (1160-1236 ஹிஜ்ரி )
- ஷாஹ் அன்வாருல் ஹக் பிரங்கி மஹல்லி (1159-1239 ஹிஜ்ரி )
- ஷாஹ் குலாம் அலி நக்ஷபந்தி திஹ்லவி (1158-1240 ஹிஜ்ரி )
- ஷாஹ் அபூ சயீத் முஜத்திதி ராம்பூரி (1196-1226 ஹிஜ்ரி )
- ஷாஹ் செய்யித் ஆலே அஹ்மத் காதிரி பரகதி மெஹ்ரார்வி (1160-1262 ஹிஜ்ரி )
- ஷாஹ் அபுல் ஹசன் பர்த் ப்ஹுல்வாரவி (1191-1265 ஹிஜ்ரி )
- ஷாஹ் அஹ்மத் சயீத் முஜத்திதி ராம்பூரி (1217-1277 ஹிஜ்ரி )
- அல்லாமா பஜ்லே ஹக் கைராபாதி (1212-1278 ஹிஜ்ரி )
- அல்லாமா அப்துல் ஹலீம் பிரங்கி மஹல்லி (1209-1285 ஹிஜ்ரி )
- அல்லாமா பஜ்லே ரசூல் உத்மானி காதிரி பதாயூனி (1213-1289 ஹிஜ்ரி )
- ஷாஹ் ஆலே ரஸூல் அஹ்மதி காதிரி பர்கத்தி மெஹ்ரார்வி (1209-1296 ஹிஜ்ரி )
- மவ்லானா நகி அலி கான் பரேல்வி (1246-1297 ஹிஜ்ரி )

இன்னும் எண்ணற்றோர் .அல்லாஹ் இவர்களை பொருந்திக் கொள்வானாக! ஆமீன்.

---

[24] இபாதாத் ஏ மல்பூஜாத் , பக்கம் 349, சிந்த் சாகர் அகாடமி , லாகூர் ,மவ்லானா உபைதுல்லாஹ் சிந்தி

**ஹிஜ்ரி 14ஆம் நூற்றாண்டு:**

- மவ்லானா அப்துல் ஹை பிரங்கி மஹல்லி லக்னவி (1264-1304 ஹிஜ்ரி )
- முப்தி இர்ஷாத் ஹுசைன் முஜத்திதி ராம்பூரி (1248-1311 ஹிஜ்ரி )
- மவ்லானா பஜ்லே ரஹ்மான் கஞ்ச் முராதாபாதி (1208-1313 ஹிஜ்ரி )
- மவ்லானா குலாம் தஸ்தகீர் குஸூரி லாகூரி (மறைவு 1315 ஹிஜ்ரி )
- மவ்லானா அப்துல் காதிர் உத்மானி காதிரி பரகதி பதாயூனி (1253-1319 ஹிஜ்ரி )
- மவ்லானா ஹிதாயத்துல்லாஹ் ராம்பூரி ஜான்புரி (மறைவு 1326 ஹிஜ்ரி )
- மவ்லானா கைருத்தீன் திஹ்லவி (மறைவு 1326 ஹிஜ்ரி )
- மவ்லானா அஹ்மது ரிழா ஹனஃபி காதிரி பரகதி பரேல்வி (1272-1340 ஹிஜ்ரி )
- ஷாஹ் அபுல் கைர் நக்ஷபந்தி திஹ்லவி (1272-1341 ஹிஜ்ரி )
- ஸெய்யித் ஷாஹ் அலி ஹுசைன் அஷ்ரபி கச்சோச்சாவி (1266-1355 ஹிஜ்ரி )
- ஷாஹ் மெஹர் அலி கோல்ராவி பஞ்சாபி (1274-1356 ஹிஜ்ரி )

இன்னும் எண்ணற்றோர் .அல்லாஹ் இவர்களை பொருந்திக் கொள்வானாக! ஆமீன்.

இதற்கு முன் உள்ள பக்கங்களில் நாம் தேவ்பந்தின் முன்னோடிகள் எழுதியதாக நாம் சுட்டிக் காட்டியுள்ள குறிப்புகளும், கருத்துக்களும் வழிகேட்டின் மீதும் குப்ரின் மீதும் அடிப்படையாக அமைந்தவை. மூல கருத்துக்களின் பிரதிகளை காண வேண்டுவோர் மவ்லானா முஹம்மது மான்ஷா தஸ்பீஹ் கஸவ்ரி எழுதிய '**தாவத் ஏ பிக்ர்** ' என்னும் நூலைக் காணவும்.

இந்த கருத்துக்கள் இஸ்லாத்தின் அடிப்படை ஆணிவேரான அல்லாஹுத்தஆலா பற்றிய நம்பிக்கையையும், நுபுவ்வத்தின் புனிதத்தையும் களங்கப்படுத்துபவை.

இவை தான் இந்திய முஸ்லிம்களிடையே பிரிவினையின் ஆணிவேராக இருந்தன. இன்னும் இந்த நிலம் பிரிவினையின் போர்க்களமாக மாறவும் காரணமாயின .இஸ்லாத்தின் ஆன்மாவையே அழிக்கும் இதன்

விளைவை இன்றும் இந்திய துணைக்கண்டத்தின் ஒவ்வொரு கிராமத்திலும், நகரிலும், பெருநகரங்களிலும் காணலாம்.

நுபுவ்வத்தின் புனிதத்தையும், அகமியத்தையும் பாதுகாக்கவும். அஹ்லுஸ் ஸுன்னத் வல் ஜமாத்தின் கொள்கைகளை பேணிக் காக்கவும் பல மிகப்பெரும் உலமாக்கள் முக்கிய பங்காற்றி இயங்கினர்.

அவர்களில், **முஹிப்பிர் ரஸூல், தாஜுல் புஹூல் மவ்லானா அப்துல் காதிர் உத்மானி காதிரி பர்கத்தி பதாயூனி** (அல்லாமா பஜ்லே ரஸூல் உத்மானி காதிரி பர்கத்தி பதாயூனி அவர்களின் மகனார்), அல்லாமா பஜ்லே ஹக் கைராபாதி (ஷாஹ் அப்துல் அஜீஸ் முஹத்தித் திஹ்லவி அவர்களின் மாணவர்) அவர்களின் மாணவர், மற்றும்

**இமாமே அஹ்லே ஸுன்னத் மவ்லானா அஹ்மத் ரிழா கான் ஹனஃபி காதிரி பர்கத்தி பரேல்வி** (மவ்லானா நகீ அலி கான் பரேல்வி அவர்களின் மகனார்), அஷ் ஷைகு ஷாஹ் ஆலே ரசூல் காதிரி பர்கத்தி மெஹ்ராரவி (சிராஜுல் ஹிந்த் ஷாஹ் அப்துல் அஜீஸ் முஹத்தித் திஹ்லவி அவர்களின் மாணவர்) அவர்களின் கலீஃபா ஆகியோர் முதன்மையானவர்கள்.

இவ்விரு பெருமக்களும் தமது காலத்தில் முக்கிய பங்காற்றினர்.இவ்விரு பெருமக்களும் மெஹ்ரேரா ஷரீபில் இருந்து பைஅத், இஜாஸத் மற்றும் கிலாபத் பெற்றிருந்தனர்.

இதில் இமாம் அஹ்மத் ரிழா கான் பரேல்வி (ரஹ்மத்துல்லாஹி அலைஹி) அவர்களின் தனித்தன்மையானது பெருமானார் கண்மணி நாயகம் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களின் மீது கொண்டு மட்டில்லாத இஷ்க் ஆகும்.

அன்னாரின் பேரனார் மவ்லானா முப்தி அக்தர் ரிழா காதிரி பரேல்வி (ரஹ்மத்துல்லாஹி அலைஹி) அவர்கள் கூறுகின்றார்கள்,"கண்மணி நாயகம் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களின் முஹப்பத் தான் அவர்களது வாழ்வில் பிரதம கவனமாக இருந்தது. அன்னாரின் கூற்றும், செயல்பாடுகளும் கண்மணி நாயகம் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களின் இஷ்கில் ஊறிப் போயிருந்தன, எந்தளவுக்கு என்றால் தமது உச்சந்தலை முதல் உள்ளங்கால் வரை கண்மணி நாயகம் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களின் இஷ்கில் மூழ்கிப் போயிருந்தன. கண்மணி நாயகம் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களின் முஹப்பத் தான் அன்னாரது வாழ்வாகவும், அவரது செய்தியாகவும் இருந்தது. "

இங்கு குறிப்பிடத்தக்க விஷயம் யாதெனில், இமாம் அஹ்மத் ரிழா கான் பரேல்வி (ரஹ்மத்துல்லாஹி அலைஹி) அவர்களின் இஷ்க் என்பது தெளிவான தீர்ப்பு எடுக்க இயலாமல் தமது உணர்விழந்து சிந்தை மாறிப் போகும் நிலையில் அல்ல, மாறாக அவரது முஹப்பத் கண்மணி நாயகம் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களின் விருப்பத்திற்கு இணங்குமாறு கட்டுப் படுத்துகின்றது. இஷ்கின் இந்த நிலையில், ஒரு மனிதனின் சுய விருப்பங்கள் மறைந்து, தமது நேசரின் விருப்பங்களை பின்தொடருபவர் ஆகின்றார்.

இந்த நிலையைத்தான் ஹதீத் ஷரீபில்”மனிதனின் விருப்பங்கள் நான் கொண்டு வந்ததுடன் (தூது) இணைந்துவிடுகின்றன” என்று கூறப்பட்டுள்ளது.

இந்த நிலையானது அன்னாரின் மார்க்க சேவைகளிலும், பணிகளிலும் வெளிப்பட்டுள்ளன. அவர்களின் ஒரு நூல் '**மகால் உல் உரபா பி இஜாஜி ஷரயின் வ உலமா** '(مقال العرفاء بإعزاز شرع وعلماء) இதை நிலை நிறுத்த போதுமானது.

இந்த நூலில் அன்னார் ஷரீயத்தின் மேன்மையை விளக்கியுள்ளதோடு, அதை எதிர்க்கும் நவீன கால சுய சிந்தனை கொண்ட ஸூஃபிக்களை தங்கு தடையின்றி மறுத்துள்ளார். ஷரீயத்திற்கு மாற்றமான செயல்களை மறுத்துள்ளதோடு,முஸ்லிம்களை அவற்றை விட்டும் விலகி இருக்க அறிவுறுத்தி உள்ளார் .உதாரணமாக பெண்கள் இக்காலத்தில் தர்காவுக்கு சென்று ஜியாரத் செய்வது,வலிமார்களின் உரூஸ் போது நிகழும் அனாச்சாரங்கள் .சஜ்தா ஏ தழீம் ,மற்றும் தஜியா (அஹ்லே பைத்தினரின் ஷஹாதத்தின் நினைவாக ) ஆகிய செயல்களை. இமாம் அஹ்மத் ரிழா கான் பரேல்வி (ரஹ்மத்துல்லாஹி அலைஹி) அவர்கள் இத்தகைய சடங்குகளில் இருந்து முஸ்லிம்கள் விலகிக் கொள்ளுமாறு மிக கடுமையாக வலியுறுத்தி உள்ளார்கள்.[25]

பேராசிரியர் முஹம்மது மசூத் அஹ்மத் நக்ஷ்பந்தி முஜத்திதி மழ்ஹரி,முப்தி முஹம்மது மழ்ஹருல்லாஹ் நக்ஷ்பந்தி முஜத்திதி (தில்லி பதேஹ்பூர் மஸ்ஜிதின் கதீப் மற்றும் இமாம்) அவர்களின் மகனார், எழுதுகின்றார்கள்:

” (**1**). இமாம் அஹ்மத் ரிழா முஹத்தித் பரேல்வி (ரஹ்மத்துல்லாஹி அலைஹி) அவர்கள் அல்லாஹ்வை பற்றியும், நபிமார்களைப் பற்றியும் தளர்வான வார்த்தைகள் அல்லது சொற்றொடர்களை பயன்படுத்துவது

---

[25] வாராந்திர ஹுஜும் .டிசம்பர் ,புது டில்லி .1988

அதபுக்கு மாற்றமான ஒன்றெனக் கருதினார்கள், ஏனெனில் அதன் நேரடிப் பொருள் சரியாக இருப்பதாக தோன்றினாலும், அவை அவமதிப்பை உண்டாக்குபவையே.

முஹத்தித் பரேல்வி அவர்களை பொறுத்தவரை அத்தகைய சொற்கள் பின்வரும் நூற்களில் இடம்பெற்றுள்ளன.

மவ்லவி காசிம் நாணோத்வியின் **தக்தீருன் நாஸ்**,
மவ்லவி அஷ்ரப் அலி தான்வியின் **ஹிப்ளுள் ஈமான்**,
மவ்லவி கலீல் அஹ்மத் அம்பேத்வியின் **அல் பராஹீன் அல் காதியா**,
மவ்லவி இஸ்மாயில் தெஹ்லவியின் **சிராத்தே முஸ்தகீம் மற்றும் தக்வியத்துள் ஈமான்**.
மவ்லவி மஹ்மூத் ஹுசைன் தேவபந்தியின் **அல் ஜகத் அல் மகல்**.

எனினும் மேற்கூறிய புத்தகங்களின் ஆசிரியர்கள் இந்த வாக்கியங்களை அவமதிப்பை ஏற்படுத்தும் அதன் நேரடிப் பொருளில் ஏற்க கூடாது என வாதிடுக்கின்றார்கள், ஏனெனில் அவர்களிடமும் அவமதிப்பு ஹராமாகும். ஆனால் முஹத்தித் பரேல்வி அவர்களின் நிலைப்பாடானது அந்த புத்தகங்களின் வாக்கியங்கள் உர்து மொழியின் சாதாரண பேச்சுவழக்கில் உள்ளவை.

அதன் இயல்பான பொருள் உர்துவை தாய்மொழியாக கொண்டு பேசுபவர் எவ்வாறு பொதுவாக புரிந்து கொள்வாரோ அதுவே ஆகும். எனவே தீர்ப்பு அத்தகைய அர்த்தத்தின் மீதே வழங்கப்படும் என்பதாம்.

**(2)** இரண்டாவதாக ,முஹத்தித் பரேல்வி (ரஹ்மத்துல்லாஹி அலைஹி) அவர்கள் குர்ஆனிலும் ,ஹதீதிலும் கண்மணி நாயகம் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் ) அவர்களின் புகழ் எவ்வாறு குறிப்பிடப்பட்டுள்ளதோ அவ்வாறே அறிவிக்கப்பட வேண்டும் என்றும் ,பரப்ப வேண்டும் என்றும் நம்பிக்கை கொண்டார்கள் .இதன் மூலம் எம்பெருமானார் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் ) அவர்களின் மேன்மையும் ,தரஜாவும் முஸ்லிம்கள் அறிந்துகொள்ளவும் அவர்களின் உள்ளம் கண்மணி நாயகம் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் ) அவர்களின் முஹப்பத்திலும்,சங்கையிலும் நிலைத்திருக்கும் என்று நம்பிக்கை பூண்டார்கள் .

எனினும், தேவ்பந்தின் உலமாக்கள் இந்த விஷயத்தில் அதிக எச்சரிக்கையுடன் இருக்க வேண்டும் என்று தேர்ந்தெடுத்தார்கள். ஏனெனில் முஸ்லிம்கள் இது விஷயத்தில் எல்லை மீறிவிடுவார்கள் என்று நினைத்தார்கள்.

**(3)** இமாம் அஹ்மத் ரிழா முஹத்தித் பரேல்வி (ரஹ்மத்துல்லாஹி

அலைஹி) அவர்களிடத்தில் பெருமானாரின் மீலாதை கொண்டாடுவது அனுமதிக்கப் பட்டதும்,விரும்பத்தக்கதும் ஆகும் .எனினும் தேவ்பந்த்தின் உலமாக்கள் அதற்கு எதிரான நிலைப்பாட்டை கொண்டிருந்தனர் .

**(4)** இமாம் அஹ்மத் ரிழா முஹத்தித் பரேல்வி (ரஹ்மத்துல்லாஹி அலைஹி) அவர்கள் பெருமானாரின் புகழ் பாடும் மவ்லித் மஜ்லிஸ்களில் கியாம் (எழுந்து நின்று சங்கை செய்வது) பாராட்டுக்குரிய செயல், எனினும் தேவ்பந்த்தின் உலமாக்கள் இதை பித்அத் என்று கருதினர்.

**(5)** இமாம் அஹ்மத் ரிழா முஹத்தித் பரேல்வி (ரஹ்மத்துல்லாஹி அலைஹி) அவர்கள் வலிமார்களின் உரூஸ் அனுமதிக்கப்பட்ட ஒன்றென (அதில் ஷரீயத்திற்கு மாற்றமான செயல்கள் நடைபெறாத பொழுது) கருதினார்கள். தேவ்பந்த்தின் உலமாக்கள் அதை அனுமதி மறுக்கப்பட்ட ஒன்றென கருதினர்.

**(6)** பாத்திஹா ஓதுவது (மரித்தோருக்கு ஈசால் சவாப் செய்தல்) இமாம் அஹ்மத் ரிழா முஹத்தித் பரேல்வி (ரஹ்மத்துல்லாஹி அலைஹி) அவர்களிடத்தில் அனுமதிக்கப்பட்ட ஒரு செயல் (அதில் ஷரீயத்திற்கு மாற்றமான செயல்கள் நடைபெறாத பொழுது). தேவ்பந்த்தின் உலமாக்கள் அதை அனுமதி மறுக்கப்பட்ட ஒன்றென கருதினர்.

சில பத்திகள் கழித்து பேராசிரியர் முஹம்மத் மசூத் அஹ்மத் எழுதுகின்றார்கள்:

தேவ்பந்த் முன்னோடிகளின் முர்ஷிதும் ஷைகுமான ஹாஜி இம்தாதுல்லாஹ் முஹாஜிர் மக்கி (ரஹ்மத்துல்லாஹி அலைஹி) அவர்களும் இது விஷயங்களில் இமாம் அஹ்மத் ரிழா முஹத்தித் பரேல்வி (ரஹ்மத்துல்லாஹி அலைஹி) அவர்களைப் போன்றே நம்பிக்கை கொண்டிருந்தார்கள் .அவர்கள் இது விஷயமாக எழுதிய நூல் **'பைஸ்லா ஹப்த் மஸ்லா' .**இந்த இரு பிரிவினரையும் ஒன்றிணைக்கும் வண்ணம் இந்த நூல் எழுதபட்டது.

எனினும் தேவ்பந்தின் உலமாக்கள் அன்னாரின் கருத்துக்களை ஏற்கவில்லை. "[26]

ஸலபுகளில் ஆரம்பித்து கலபுகள் வரை எல்லோரதும் ஏகோபித்த முடிவு நம் உயிரினும் மேலான கண்மணி நாயகம் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களை அவமதிப்பது கடுமையான குற்றம் மற்றும் குப்ரை

[26] இமாம் அஹ்மத் ரிழா முஹத்தித் பரேல்வி ,பக்கம் 37-38,காதிரி கிதாப் கர் ,பரேலி ,பேராசிரியர் முஹம்மத் மசூத் அஹ்மத்

வெளிப்படுத்தும் செயலாகும். குர்ஆன், ஹதீத் மற்றும் ஸஹாபாக்கள் .தாபியீன்களுடைய சொற்கள் இந்த சட்டத்தின் ஆதாரமாக அமைகின்றன.

இது விஷயமாக தாருல் உலூம் தேவ்பந்த்தின் **ஷைகுல் ஹதீத் மவ்லானா ஹுஸைன் அஹ்மத் டாண்டவி** இது விஷயமாக எழுதுகின்றார்கள்,
'நபிகள் நாயகம் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களை அவமதிப்பது குப்ராகும். தெளிவான அவமதிப்பை விடுங்கள், ஒரு மனிதன் (தெளிவற்ற சொல்லாடல் காரணமாக) அவமதிப்பை ஒத்திருக்கும் சொற்களை பிரயோகிப்பானேயானால், இதுவும் குப்ர் என்னும் தீர்ப்பை வழங்கும் காரணமாகும். '[27]
**[நூல் - மக்தூபாத் ஷைகுல் இஸ்லாம், வால்யூம் 2, பக்கம் 165]**

இதைப் போன்றே *இல்ஹாத்* மற்றும் *ஜந்தகா* வும் குப்ர். இன்னும் ஷரீயத்தின் ஆதாரங்களை சேகரித்த பின்பு, தீனுடைய அடிப்படை நம்பிக்கை சார்ந்த விஷயங்களை மறுக்கும் ஒருவரை காபிர் என்று தீர்ப்பு அளிப்பது கடமை.

**மவ்லானா அமீன் அஹ்சன் இஸ்லாஹி, மத்ரஸத்துல் இஸ்லாஹ் (ஆசம்கர், உத்தர்பிரதேஷ்)** ஒரு கடிதத்தில் பின்வருமாறு எழுதுகின்றார்கள்,

'மவ்லானா தானவி அவர்களின் பத்வா, மவ்லானா ஷிப்லி நுஃமானி அவர்களும் மவ்லனா ஹமீதுத்தீன் பாராஹி அவர்களும் காபிர் இன்னும் மத்ரசத்துள் இஸ்லாஹ் அவர்களின் பணியில் ஒரு அங்கம் வகிப்பதால், அது குப்ருடைய மத்ரஸா இன்னும் அதன் குப்ரியத் எந்த அளவுக்கு உள்ளதென்றால் அந்த மத்ரஸாவின் தாவா பணிகளில் கலந்து கொள்ளும் உலமாக்கள் *முல்கித் மற்றும் காபிர்கள்* என்று வெளியானது'[28]

அஷ்ரப் அலி தான்வியின் மாணவர் மற்றும் கலீபா **அப்துல் மஜீத் தைராபாதி**, அஷ்ரப் அலி தான்விக்கு ஓர் கடிதம் எழுதி அதில் மவ்லானா ஷிப்லி நுஃமானி, மவ்லானா ஹமீதுத்தீன் பராஹி ஆகியோரின் அறிவாற்றல், தக்வா,மார்க்கப் பணிகள் ஆகியவற்றை புகழ்ந்து எழுதினார். **அஷ்ரப் அலி தானவி** பதில் பின்வருமாறு எழுதினார். 'இவை எல்லாம் செயல்கள் (அமல்). நம்பிக்கை இதை விட்டும் தனித்த ஒரு விஷயம். நல்ல நம்பிக்கை தீய செயல்களுடன் இணைக்கப்படலாம்,

[27] மக்தூபாத் ஷைகுல் இஸ்லாம், வால்யூம் 2, பக்கம் 165
[28] ஹக்கீமுல் உம்மத் ,பக்கம் 475 , ஆசிரியர் - அப்துல் மஜீத் தைராபாதி

எவ்வாறு தீய கொள்கைகளுடன் நன் நம்பிக்கை இருக்கின்றதோ அது போல.'[29]

இந்த தலைப்பில் மேலதிக விபரங்கள் பின்வரும் நூற்களில் காணலாம்.
***கிதாப் அல் ஷிபா*** - காழி இயாழ் அல் மாலிகி அல் அந்தலூசி(ரஹ்மத்துல்லாஹி அலைஹி ) , *அஸ் சரீம் அல் மசலூல்* - இப்னு தைமிய்யா , *இஃபார் அல் முல்கிதீன்* - அன்வர் ஷாஹ் காஷ்மீரி (ஷைகுல் ஹதீத் ,தாருல் உலூம் தேவபந்த் ) , *அஷத்துல் அத்ஹாப்* - முர்தஸா ஹசன் தர்பாங்வி (முதன்மை கல்வி செயலர் ,தேவபந்த் ) .இரண்டு தற்கால புதிய புத்தகங்கள் *நமூஸ் ஏ ரஸூல் அவ்ர் கானூன் ஏ தவ்ஹீன் ஏ ரிஸாலத்* - நீதிபதி முஹம்மத் இஸ்மாயில் குரேஷி , *குஸ்தாக் ஏ ரஸூல் கி ஷரீ ஹைசியத்* - முப்தி முஹம்மத் குல் ரஹ்மான் காதிரி .

அஹ்லுஸ் ஸுன்னத் வல் ஜமாத்தின் உலமாக்கள் நபித்துவத்தின் புனிதத்தை பாதுகாத்ததோடு, உறுதி செய்து நிறுவப்பட்ட நம்பிக்கைகள் மீது நிகழ்த்தப்படும் தாக்குதலுக்கு எதிராக ஜிஹாத் புரிந்தனர்.

அவர்களின் அடிச்சுவட்டை பின்பற்றி, **இமாமே அஹ்லுஸ் ஸுன்னாஹ் மவ்லானா அஹ்மத் ரிழா ஹனபி காதிரி பர்கத்தி பரேலி** அஹ்லுஸ் ஸுன்னத் வல் ஜமாத்தின் கொள்கைகளை தமது எழுத்துக்களின் மூலம் காத்தனர் .அன்னாரின் நூற்கள் ***கன்சூல் ஈமான் பீ தர்ஜூமத்துல் குர்ஆன், அல் அதாயா அல் நபவிய்யா பி அல் பதாவா அல் ரிழ்விய்யா ,ஜத் அல் மும்தர் அலா ரத் அல் முஹ்தர் , ஹதாயிகே பக்ஷிஷ்* மற்றும் *தவ்லா அல் மக்கியா*** ஆகியவை அத்தகைய குழப்பங்களுக்கு எதிராக அன்னாரின் முயற்சியின் ஆதாரங்கள் .

அன்னாருடைய மார்க்க சேவைகளின் ஒரு பகுதி தான் *பதாவா அல் ஹரமைன் ரஜபி நத்வத் அல் மைன் (ஹிஜ்ரி 1317 , 1899 ஆம் ஆண்டு ), அல் முஸ்தமத் அல் முஸ்தநத் (ஹிஜ்ரி 1320, 1902 ஆம் ஆண்டு ), ஹுஸாம் அல் ஹரமைன் (ஹிஜ்ரி 1324 )* ஆகியவற்றில் அவர்கள் மேற்கூறப்பட்ட தேவ்பந்தி முன்னோடிகளின் கூற்று குப்ர் என்று மார்க்கத் தீர்ப்பு வழங்கி ,அதனை ஹரமைனின் உலமாக்களிடம் சமர்ப்பித்தார் .அவர்கள் அதற்கு ஒப்புதல் (தக்ரீஜ் ) வழங்கினார்கள் .

இது பற்றி மேலதிக விபரங்களுக்கு ***பாஜிலே பரேல்வி உலமா ஏ ஹிஜாஸ் கி நஜர் மேன்*** என்று பேராசிரியர் .முனைவர் .மசூத் அஹ்மத் எழுதிய நூலைக் காணவும்.

ஒரு பாகீஹ் மற்றும் முப்தியாக இமாம் அஹ்மத் ரிழா கான் பரேல்வி (ரஹ்மத்துல்லாஹி அலைஹி) அவர்கள் ஆயிரக்கணக்கான

---

[29] ஹக்கீமுல் உம்மத் ,பக்கம் 476 , ஆசிரியர் - அப்துல் மஜீத் தைராபாதி

பத்வாக்களை எழுதி, எண்ணற்ற கேள்விகளுக்கு பதில் அளித்தனர். அவர்களின் சமகால ஸுன்னி உலமாக்களும் இந்த சேவையை செய்தனர் ஆயினும், இமாம் அஹ்மத் ரிழா (ரஹ்மத்துல்லாஹி அலைஹி) அவர்களின் அந்தஸ்தானது அவர்கள் அனைவரின் சார்பாக பேசுபவராகயிருந்தது (செய்தி தொடர்பாளர் - Spokeperson). அவர்கள் எப்பொழுதும் பொய்யான நம்பிக்கைகள் மற்றும் இஸ்லாத்திற்கு எதிரான சிந்தாந்தங்கள் ஆகிவற்றை எதிர்ப்பதில் முன்னோடியாக விளங்கினார்.

அன்னார் வஹாபிய பிரிவு மற்றும் அதன் கிளை பிரிவுகளை மிகச் சிறப்புமிக்க தனது திறமையினால் மறுத்ததன் காரணமாக, பல போலியான குற்றச்சாட்டுகளுக்கு உள்ளானார்கள்.

அன்னார் தமது நூலான **'தம்ஹீதே ஈமான்'** நூலில் எழுதுகின்றார்கள்,

‘பொதுமக்களை ஏமாற்ற இந்த ஆட்கள் ஒரு திட்டத்தை தீட்டியுள்ளனர். அவர்கள் கூறுகின்றார்கள், 'அஹ்லுஸ் ஸுன்னாஹ்வின் இத்தகைய உலமாக்களின் நம்பகத்தன்மை எத்தகையது? அவர்கள் சின்ன சின்ன விஷயங்களில் தக்ஃபீர் செய்கின்றனர் .அவர்களின் இயந்திரங்கள் மக்களை காபிர் என்று மட்டுமே கூறும் கட்டளைகளை கடைந்து அனுப்புகின்றன.

அவர்கள் மவ்லவி இஸ்மாயில் திஹ்லவி, மவ்லவி ஷாஹ் இஷ்ஹாக், மவ்லவி அப்துல் ஹை ஆகியோரை காபிர் என்று பத்வா கொடுத்துள்ளனர். '
(இங்கு இமாம் அஹ்மத் ரிழா அவர்கள் தாம் இவர்கள் மீது குப்ர் பத்வா வெளியிடவில்லை என்கின்றார்)

இன்னும் அவர்களில் சிறிதும் வெட்கம் இல்லாதோர் நான் - ஷாஹ் அப்துல் அஜீஸ் ,ஷாஹ் வலியுல்லாஹ் ,ஹாஜி இம்தாதுல்லாஹ் ,மவ்லானா ஷாஹ் பஜ்லுர் ரஹ்மான் (அஹ்லுஸ் ஸுன்னத் வல் ஜமாத்தின் உலமாக்கள் ) ஆகியோரையும் ,இன்னும் அவர்களில் வெட்கம் என்னும் எல்லையைக் கடந்தவர்கள் ,நான் ஷைக் முஜத்தித் அல்பதானி (ரஹ்மத்துல்லாஹி அலைஹி ) அவர்களை காபிர் என்று கூறியதாக - நான் அல்லாஹ்விடத்தில் பாதுகாவல் தேடுகின்றேன் - கூறுகின்றார்கள் . (தாம் அவ்வாறு கூறவில்லை என்று வெளிப்படுத்துகின்றார்கள்).

அவர்கள் யாரிடம் எல்லாம் தொடர்பு கொள்கின்றார்களோ, அத்தகையோர் பெருமதிப்பு வைத்திருக்கும் பெரியார்களின் பெயர்களை குறிப்பிட்டு அவர்கள் மீது நான் தக்ஃபீர் செய்ததாக கூறுகின்றனர். இன்னும் உள்ளபடியே அவர்களில் சிலர் மவ்லானா

முஹம்மது ஹுசைன் இலாஹாபதி அவர்களிடம் சென்று, நான் ஷைகுல் அக்பர் முஹைஹனுதீன் இப்னு அரபி (குத்திஸிர்ரஹு) அவர்களின் மீது தக் ஃபீர் செய்ததாகக் கூறினர் - நான் அல்லாஹ்விடத்தில் பாதுகாவல் தேடுகின்றேன்.

அல்லாஹுதஆலா சங்கைமிகு மவ்லானா அவர்களுக்கு சுவர்க்க பதியில் உயர்வான இடத்தை வழங்குவானாக, அன்னார் அந்த பொய்யர்களை நம்பவில்லை. மாறாக அவர்கள் திருக்குர்ஆன் ஷரீபின் வசனத்திற்கு கீழ்ப்படிந்தார்கள்,

**'நம்பிக்கையாளர்களே! யாதொரு விஷமி உங்களிடம் யாதொரு செய்தியைக் கொண்டுவந்தால், (அதன் உண்மையை அறியும் பொருட்டு அதனைத்) தீர்க்க விசாரணை செய்து கொள்ளுங்கள். '[49:6]**

இன்னும் நான் அவ்வாறு கூறினேனா? என்று என்னிடம் கேட்டு எழுதினார்கள்.

நான் அத்தகைய கூற்றை மறுக்கும் விதமாக நூல் வடிவில் ஒரு மறுப்புரை ஒன்றினை, ***இன்ஜா அல் பாரி அந்த வஸ்வாஸில் முப்தாரி*** என்ற தலைப்பில் அவருக்கு பதிலாக எழுதினேன். அதை வாசித்த மவுலானா அவர்கள் 'லா ஹவ்ல வலா ஹுவ்வத்த இல்லா பில்லாஹ் ' என்றனர். வஞ்சகத்தினால் முற்றுகையிட முயன்றவர்களின் சதியை முறியடித்தவர்களாக. [30]

அஹ்லுஸ் ஸுன்னத் வல் ஜமாத்தின் முக்கியத்துவம் வாய்ந்த உலமாக்களில் ஒருவரான **அல்லாமா ஸெய்யித் அஹ்மத் காஜ்மி அம்ரோஹாவி (அன்வாருல் உலூம்,முல்தான்** ) எழுதுகின்றார்கள் ,

'தக்ஃபீர் (ஒருவரை காபிர் என்று பத்வா வழங்குவது) உடைய விஷயத்தில், எப்பொழுதும் எங்களுடைய நிலைப்பாடு என்னவென்றால்,யாரேனும் குப்ருடைய வாசகங்களை உபயோகித்தால் ,நாம் அவரின் மீது தக்பீருடைய பத்வா வழங்குவதை விட்டும் விலக மாட்டோம் . அவர் தேவ்பந்தியோ, பரேல்வியோ, லீகைச் சார்ந்தவரோ, காங்கிரசியோ, நேச்சரியோ (இயற்கைவாதிகள்), நத்வியோ யாராக இருந்தாலும் சரி. இது விஷயத்தில் நாம் நண்பரா அல்லது எதிரியா என்று பாகுபாடு பார்ப்பதில்லை.

இன்னும் நிச்சயமாக இதன் அர்த்தம்,லீகைச் சார்ந்த ஒருவர் குப்ருடைய வாசகத்தை உபயோகித்தால் ,லீகைச் சார்ந்த எல்லோரும் காபிர்கள்

---

[30] தம்ஹீதே ஈமான் ,பக்கம் 45-46,இமாம் அஹ்மத் ரிழா பரேல்வி ,இதாரா மஃரிப் ஏ நுஃமானியா ,லாகூர்

என்று அர்த்தம் அல்ல அல்லது ஓர் நத்வி குப்ருடைய செயலை செய்தால் எல்லா நத்விக்களும் காபிர் அல்ல என்பதாம் . நாங்கள் தேவ்பந்த் ஊரில் வசிக்கும் எல்லா நபர்களையும், ஒரு சில தேவ்பந்த்தை சார்ந்தவர்கள் எழுதிய குப்ரான வாசகங்களுக்காக நாம் காபிர்கள் என்று கூறவில்லை.

நாமும் நமது முன்னோடிகளும் மீண்டும் மீண்டும் வலியுறுத்துவது, நாங்கள் தேவ்பந்த் அல்லது லக்னோ வாசிகள் அனைவரையும் காபிர்கள் என்ற மார்க்க தீர்ப்பு அவர்கள் அங்கு வசிப்பதன் காரணமாகவே நாம் வழங்கிவிடவில்லை. எம்மைப் பொறுத்தவரை , யார் ஒருவன் அல்லாஹுத்தஆலா வை,அவனது நபிமார்களை ,அவனது தேர்ந்தெடுக்கப்பட்ட நல்லடியார்களை நிந்தனை செய்கின்றானோ ,பல முறை எச்சரித்தும் தவ்பா செய்யவில்லையோ அவன் தான் காபிர் .இன்னும் நாங்கள் எத்தகையோர் அத்தகைய குப்ரை அறிந்து கொண்டு ,அவமதிப்பு அளிக்கும் அதன் அசல் அர்த்தங்களை அறிந்து கொண்டு , அத்தகைய அவமதிப்புகளை உண்மை என்று ஏற்று ,அவமரியாதை செய்பவர்களை நம்பிக்கையாளராகவும் . தங்களது தலைவர்களாகவும் ஏற்றுக் கொண்டுள்ளாரோ அவர்களை நாம் காபிர்கள் என்று மார்க்கத் தீர்ப்பு வழங்குகின்றோம்.

இது தவிர, யாதொரு முஸ்லிமையும் நாம் காபிர் என்று மார்க்கத் தீர்ப்பு வழங்குவதில்லை. நாம் காபிர்கள் என்று மார்க்கத் தீர்ப்பு வழங்கிய நபர்கள் மிகவும் குறைவு மற்றும் வறையரைப்படுத்தப்பட்டது (குறிப்பிட்ட பிரச்சனையின் அடிப்படையில்). இந்த குறிப்பிட்ட நபர்களைத் தவிர தேவ்பந்த் அல்லது பரேலியின் எந்த ஒரு முஸ்லிமும் காபிர் என்று தீர்ப்பளிக்கப்படவில்லை. அது போலவே லீக் மற்றும் காங்கிரஸ் கட்சியின் தொண்டர்களின் விஷயத்திலும் இதே நிலைப்பாடு தான். எல்லா முஸ்லிம்களையும் நாம் முஸ்லிம்கள் என்றே கருதுகின்றோம்.'[31]

**முப்தி முஹம்மத் ஷரீப் அல் ஹக் அம்ஜதி**, புஹாரி ஷரீபின் விரிவுரையாளரும், தாருல் இப்தா,ஜாமியா அஷ்ரபியா ,முபாரக்பூரின் (இந்தியா ) தலைவரும் ஆனவர்கள் எழுதுகின்றார்கள் .

'பத்வா என்னும் மார்க்கத் தீர்ப்பு வழங்குவதற்கு பாமர மக்களிடம் வழக்கத்தில் உள்ள சொல்லாடல் (உர்ப்) மட்டும் போதுமானது அல்ல. எனவே தம்மை தேவ்பந்தி என்று கூறிக் கொள்ளும் நபர் ,மற்றவர்களால் தேவ்பந்தி என்று அழைக்கப்படும் நபர் ,இந்த நான்கு தேவ்பந்துடைய உலமாக்களை தம்முடைய தலைவர்கள் என்று ஏற்றுக் கொள்பவர் ,இன்னும் அஹ்லுஸ் ஸுன்னத் வல் ஜமாத்தினரை பித்அத்தி

---

[31] அல் ஹக் அல் முபீன் ,பக்கம் 24-25 , அல்லாமா அஹ்மத் சயீத் காஜ்மி ,முல்தான்

என்று அடையாளமிடுபவர் , ஆனால் எதார்த்தத்தில் இந்த நான்கு தேவ்பந்தி உலமாக்களின் குப்ர் வாக்கியங்களை அறியாதிருந்தால் ,அத்தகைய நபர் தேவ்பந்தி அல்ல (காபிர் என்று தீர்ப்பு வழங்கப்பட்டவர்) .அத்தகைய நபர் நம்பிக்கை மறுப்பாளர் அல்ல இன்னும் அவரது ஜனாஸா தொழுகையை தொழுவது இறைமறுப்பு அல்ல .அல்லாஹ் நன்கு அறிந்தவன் . '[32]

மொழிபெயர்ப்பாளரின் குறிப்பு - ஷைகு ஷரீப் அல் அம்ஜதி அவர்கள் 'எதார்த்தத்தில் தேவ்பந்தி இல்லை ' என்று குறிப்பிடக் காரணம், இமாம் அஹ்மத் ரிழா மற்றும் ஏனைய ஸுன்னி உலமாக்களால் வழங்கப்பட்ட பத்வாவில், 'தேவ்பந்தி' என்று பதம் ஒரு குறிப்பிட்ட சாராரையே குறிக்கும்.

அஹ்லுஸ் ஸுன்னத் வல் ஜமாத்தின் உலமாக்கள் ஒருவரை காபிர் என்று மார்க்கத் தீர்ப்பு வழங்குவதற்கான விதிகளையும், நிபந்தனைகளையும் விவரித்துள்ளனர்.

* தகல்லும் - ஒரு குறிப்பிட்ட வாக்கியம் நிச்சயமாகச் சொல்லப்பட்டது.

* கலாம் - அவ்வகையான வாக்கியம் நிச்சயமாக குப்ரானது.

* முதகல்லிம் - அவ்வகையான வாக்கியம் நிச்சயமாக அந்த நபரால் சொல்லப்பட்டது.

மேற்குறிப்பிட்ட நிபந்தனைகளில்,சிறிதளவும் சந்தேகத்திற்கிடமில்லாத பொழுது (அல்லது சொல்லப்பட்டது தவறாக புரிந்துகொள்ளப்பட்டது என்றில்லாத போது ) அல்லது சொல்லப்பட்டதின் பெயரில் தகுந்த விளக்கம் அளிக்காத பொழுது தான் குப்ருடைய தீர்ப்பு வழங்கப்படும் . இதுவே தான் செயல்களுக்கும், வார்த்தைகளுக்கும் (குப்ரின் அளவில் கொண்டு சேர்க்கக் கூடிய) பொருந்தும். இதை ஒரு எளிய உதாரணம் கொண்டு புரிந்து கொள்ள முடியும்.

தம்மை முஸ்லிம் என்று உரிமை கோரும் ஜைத் தின் மீது குப்ருடைய மார்க்கத் தீர்ப்பு எப்பொழுது வழங்கப்படும் என்றால், ஜைத் மார்க்கத்தின் அடிப்படை நம்பிக்கைகளில் (ஜரூரியத் ஏ தீன்), தனது வார்த்தைகளின் மூலமோ,செயல்களின் மூலமோ மறுத்தாலோ அல்லது மாற்றமாக நடந்தாலோ , இன்னும் அத்தகைய மறுப்பும் ,மாற்றமும்

* நிச்சயமாக நடந்துள்ளது.
* அத்தகைய செயல்களும், சொற்களும் நிச்சயமாக குப்ரானது.

---

[32] மஆரிப் ஷரஹ் புஹாரி , பக்கம் 914,ரஜா அகாடமி

* அத்தகைய செயல்களும், சொற்களும் நிச்சயமாக ஜைத் உடையவை தான்.

மேலே மூன்று அம்சங்களும் உறுதியாக நிரூபிக்கப்பட்டு, உறுதி செய்யப்படுகின்றன எனும் பொழுது தான், குப்ருடைய மார்க்கத் தீர்ப்பு ஜைத் தின் மீது வழங்கப்படும்.

தேவ்பந்த்தின் முன்னோடி உலமாக்கள் (அஷ்ரப் அலி தான்வி, முஹம்மது காஸிம் நாணோத்வி, கலீல் அஹ்மத் அம்பேத்வி, ரஷீத் அஹ்மத் கங்கோஹி) மற்றும் அவர்களது கூற்றுகளின் மீது அஹ்லுஸ் ஸுன்னத் வல் ஜமாத்தின் உலமாக்களின் தெளிவான நிலைப்பாடு என்னவெனில்: இந்த குப்ருடைய வாக்கியங்களைப் பற்றி முழுமையான அறிவுள்ள நபர், மற்றும் அதைப் பற்றி தெளிந்த புரிதல் கொண்ட பின்னும், இத்தகைய நபர்களை காபிர்கள் என்று நம்ப மறுத்தால், அவர் தாமே காபிராவார்.

அதாகிறது, இந்த விஷயம் தொடர்பான முழுமையான அறிவும், அவ்வாக்கியங்களைப் பற்றிய முழுமையான புரிதலும் இருத்தல், இரண்டாவது நபரின் (தேவ்பந்த் முன்னோடிகளின் அபிமானி அல்லது அவர்களை ஏற்றுக் கொண்டவர்) மீது குப்ருடைய தீர்ப்பு வழங்குவதற்கு தேவையான நிபந்தனையாகும்.

நபிகள் நாயகம் ﷺ அவர்களின் காலத்தில் இருந்து தொடங்கி அன்னாரின் தோழர் பெருமக்களான சஹாபாக்கள் , மற்றும் அவர்களைப் பின்தொடர்ந்து வந்த பெருமக்களான தாபயீன்கள் , மற்றும் தப்ஸீர் ,ஹதீத் ,பிக்ஹ் ,தஸவ்வுப் , ஸீரா மற்றும் தாரீக் நூற்களில் ஆவணப்படுத்தப்பட்டுள்ளவையே அஹ்லுஸ் ஸுன்னத் வல் ஜமாத்தின் கொள்கை கோட்பாடுகளும் ,செயல்பாடுகளும் ஆகும் .

இந்திய துணைக்கண்டத்தைப் பொறுத்தவரை வட நாட்டில் பிறங்கி மஹால், லக்னோ,கைராபாத் , பதாயூன் மற்றும் பரேலி உலமாக்களின் பேச்சுகளும் ,எழுத்தும் மேற்குறிப்பிட்ட இந்த நம்பிக்கையின் தொகுப்பிற்கு இணங்க உள்ளவை .

இத்தகைய உலமாக்கள் தான், இஸ்லாமிய உலமாக்களின் உண்மையான வாரிசுகளான, ஷாஹ் அப்துல் ஹக் முஹத்திஸ் திஹ்லவி அவர்கள் (மறைவு -ஹிஜ்ரி 1052),சிராஜுல் ஹிந்த் ஷாஹ் அப்துல் அஜீஸ் முஹத்திஸ் திஹ்லவி அவர்கள் (மறைவு-ஹிஜ்ரி 1239) ஆகியோரின் போதனைகள் மற்றும் கருத்துக்களின் உண்மையான சார்பாளர்கள் .

அவர்கள் இஸ்லாமிய கோட்பாடுகளில் முரண்படுகின்ற புதிய யோசனைகளை அவர்கள் ஏற்கவோ அல்லது தணிக்கை செய்யவோ இல்லை. தங்களின் முன்னோடிகளால் முன்வைக்கப்பட்ட மற்றும்

பிரசுரிக்கப்பட்ட கோட்பாட்டை அவர்கள் சிரத்தையோடு சமரசம் செய்யாமல் கடைப்பிடிக்கிறார்கள். இதை ஒரு விலைமதிப்பற்ற பரிசாக கருதுவதுடன், தங்களின் இரட்சிப்புக்கும், ஏனைய இஸ்லாமியரின் இரட்சிப்புக்கும் இதுவே பாதை என்று கருதுகின்றார்கள்.

இமாம் அஹ்மத் ரிழா கான் காதிரி அவர்களின் நெருங்கிய பிரதிநிதியான மவ்லானா நயீமுத்தீன் முராதாபாதி அவர்கள் எழுதுகின்றார்கள், " ஸுன்னி என்பவர், மா அன அலைஹி வ அஸ்ஹாபிஹி, என்பதற்கு வாழும் உதாரணமாக இருப்பவர் ஆகும். அவர் குலபாயே ராஷிதீன்கள் ,மார்க்கத்தின் இமாம்கள் (பிக்ஹ் மற்றும் தஸவ்வுப் ), மற்றும் பிந்தைய உலமாக்களில் ஷைகு ஷாஹ்அப்துல் ஹக் முஹத்திஸ் திஹ்லவி , மலிக்குல் உலமா பஹ்ருல் உலூம் மவ்லானா அப்துல் அலி பிராங்கி மஹாலி , மவ்லானா பஜ்லே ஹக் கைராபதி , மவ்லானா பஜ்லே பதாயூனி , முப்தி இர்ஷாத் ஹுசைன் ராம்பூரி , முப்தி ஷாஹ் அஹ்மத் ரிழா கான் பரேலி ஆகியோரின் கொள்கையின்படி இருப்பவர் . "[33]

இமாம் அஹ்மத் ரிழா கான் காதிரி அவர்கள் - அஹ்லுஸ் ஸுன்னத் வல் ஜமாத்தின் பிற உலமாக்கள் போன்று, முஸ்லிம்கள் தமது அகீதாவில் உறுதியானவர்களாகவும், தமது சமூக நிலைப்பாடுகளில் சிறந்து விளங்கவும் அறிவுறுத்தியுள்ளனர்.

இவை சிறு புத்தகங்களாக எழுதப்பட்டுள்ளன .பின்வருபவை அன்னாரின் பத்வாக்களின் பாடங்கள் ஆகும்;

- ஷரீயத் மட்டுமே இறுதியான சட்டமாகும், முஸ்லிம்கள் அனைவரின் மீதும் கட்டாயமானதும் ஆகும்.

- பித்அத்தை விட்டும் விலகி இருப்பது மிகவும் முக்கியமானது

- அறிவில்லாத ஓர் ஸுபி, செயற்பாடற்ற ஷெய்கும் ஷைத்தானின் பரிகாசம்.

- குப்பார்களை பின்பற்றுவதும், வழிகேடர்களுடன் உறவாடுவதும், ஹிந்துக்களின் பண்டிகைகளில் பங்கெடுப்பதும் தடுக்கப்பட்டுள்ளது.

- அல்லாஹ் அல்லாதவற்றிக்கு வழிபாடு செய்யும் எண்ணத்துடன் ஸுஜூது செய்வது ஷிர்க், சங்கை செய்யும் பொருட்டு ஸுஜூது செய்தால் அது ஹராம்.

---

[33] அல் பகீஹ் - பக்கம் 9, அம்ரித்ஸர் , 21 ஆகஸ்ட் , 1925

- சக முஸ்லிம்களை கேவலப்படுத்தி, அவர்களைக் காட்டிலும் தன்னை மேன்மையானவராகக் காட்டிக் கொள்வது தடுக்கப்பட்டுள்ளது.

- ஷியாக்கள் முஹர்ரம் மாதத்தில் வைக்கும் தாஜியா, அவற்றை சங்கை செய்வதும் தடை செய்யப்பட்டுள்ளது.

- இசைக் கருவிகளுடன் கூடிய கவ்வாலி (ஸமா) தடை செய்யப்பட்டுள்ளது.

- இஸ்லாமிய பெண்கள் ஜியாரத்திற்காக (வலிமார்களின் மகாம்களுக்குச் செல்வது) பயணம் செய்வது அனுமதிக்கப்படவில்லை.

- உயிருள்ளவற்றின் படங்கள் வரைவதற்கு அனுமதி இல்லை.

- ஸலவாத் ﷺ என்பதை சுருக்கி ஸாத் லாம் ஐன் மீம் என்று எழுதுவதற்கு அனுமதி இல்லை.

- மாதிரி கபுறுகளை (அடிப்படையோ, ஆதாரமோ இல்லாதது, மக்களிடையே வாய் வழி பரவியது) ஜியாரத் செய்வது கூடாது.

- ஈசாலே சவாப் என்ற எண்ணத்துடன், ஏழைகளுக்கும், தேவையுள்ளவர்களுக்கும் உணவளிப்பது அனுமதிக்கப்பட்டது. எனினும் செல்வந்தர்களைக் கூட அழைத்து விருந்து உபச்சாரங்கள் போல் நடத்துவதற்கு அனுமதி இல்லை.

மேலதிக விபரங்களுக்கு நான் எழுதி இந்தியா மற்றும் பாகிஸ்தானில் வெளிவந்த '**இமாம் அஹ்மத் ரிழா அவ்ர் ரத்தே பித்அத் ஒ முன்கராத்** ' என்னும் நூலை காணவும்.

ஸவாத் அல் ஆஜம் என்னும் அஹ்லுஸ் ஸுன்னத் வல் ஜமாத்தினரை ஒட்டியே அன்னாரது நம்பிக்கைகள் இருந்தன ; பதாயூன் ,கைராபாத் , பரேலி உலமாக்கள் ,மஹ்ரேரா ஷரீப் ,கிச்சவ்சா ஷரீப் மஷாயிகுமார்களின் நம்பிக்கைகள் பின்வரும் செயல்கள் ,கொள்கைகள் அனுமதிக்கப்பட்டது என்பது போன்றே இமாம் அஹ்மத் ரிழா கான் காதிரி அவர்களது நம்பிக்கைகள் இருந்தன .

- அன்பியாக்கள் மற்றும் வலிமார்களின் தவஸ்ஸுல் அனுமதிக்கப் பட்டதாகும்.

- அன்பியாக்கள் மற்றும் வலிமார்களின் நினைவாக உள்ள பொருட்களை (ஆஸார் ஷரீப்) சங்கை செய்வது அனுமதிக்கப்பட்டது.

- வலிமார்களின் மகாம்களை தவஸ்ஸுலின் எண்ணத்துடன் ஜியாரத் செய்வது அனுமதிக்கப்பட்டது.

- அனாச்சாரங்கள், அனுமதியற்ற செயல்களை விட்டும் அகன்ற வலிமார்களின் உரூஸ் நிகழ்வுகளை நடத்துவது அனுமதிக்கப்பட்டது.

- பெருமானார் கண்மணி நாயகம் ﷺ அவர்களின் மீலாத், மவ்லித் மஜ்லிஸ்கள் நடத்துவதும், அவற்றில் கியாமில் எழுந்து நிற்பதும் அனுமதிக்கப்பட்டது.

- இறந்தவர்களுக்கு நன்மைகளை எத்தி வைக்கும் பாத்திஹா மற்றும் ஈசாலே சவாப் அனுமதிக்கப்பட்டது.

இந்த அமல்கள் நமது முன்னோடிகளால் செயற்படுத்தப்பட்டு வந்துள்ளன. இன்றும் உலகெங்கிலும் உள்ள 90% முஸ்லிகளால் இந்த அமல்கள் செயற்படுத்தப்பட்டு வருகின்றன.

சமீபகாலத்தில் ஹிஜாஸ் மாகாணத்தில் வாழ்ந்து வந்த பாரம்பரியம் மிக்க குடும்பத்தைச் சார்ந்த, முஹத்திஸே ஹரமைன் ஷரீப் அஷ்ஷைகு செய்யத் முஹம்மத் பின் அலவி அல் மாலிக்கி அவர்கள் எழுதி அரபியில் வெளிவந்த நூல், '**மபாஹீம் யஜிப் அல் துசஹ்ஹஹா** ' **[முதல் பதிப்பு, 1985, கெய்ரோ]** அஹ்லுஸ் ஸுன்னத் வல் ஜமாத்தின் நடைமுறைகளை விரிவான விளக்கமாக எடுத்துக்காட்டுகளும், ஆராய்ச்சியும் கொண்ட நூலாகும். சம காலத்தின் பல அரபுலக மற்றும் ஆப்பிரிக்க ஸுன்னத் வல் ஜமாத் உலமாக்கலால் அங்கீகரிக்கப்பட்ட நூலாகும். அவர்களில் பெரும்பாலானோர் 'ராப்தா அல் ஆலமி இஸ்லாமி', மக்கா வின் அங்கத்தினர் ஆவர். இந்நூல் இந்தியா,பாகிஸ்தானில் உர்துவில் '**இஸ்லாஹே பிக்ர் அவ்ர் இத்திக்காத்** ' என்னும் பெயரில் மொழிபெயர்க்கப்பட்டு வெளிவந்தது .இந்நூல் **"Notions That Must Be Corrected"** ஆங்கிலத்திலும் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது .

ஸெய்யித் முஹம்மத் பாரூக் காதிரி, இமாமுல் ஹிந்த் ஷாஹ் வலியுல்லாஹ் முஹத்தித் திஹ்லவி அவர்களது தசவ்வுப் உடைய நூலான '**அன்பாஸ் அல் ஆரிபீன்** ' நூலின் உர்து மொழிபெயர்ப்பாளர், அஹ்லுஸ் ஸுன்னத் வல் ஜமாத்தினரின் நடைமுறைகள் குறித்து எழுதுகின்றார்கள்,

'எண்ணிப் பாருங்கள்! என்ன ஷாஹ் அப்துர் ரஹீம் அவர்கள், இமாமுல் ஹிந்த் ஷாஹ் வலியுல்லாஹ் முஹத்தித் திஹ்லவி அவர்கள், சிராஜுல் ஹிந்த் ஷாஹ் அப்துல் அஜீஸ் முஹத்தித் திஹ்லவி அவர்கள் ஆகியோர் எல்லாம் பரேல்விகளா???

இமாம் ஷாஹ் அஹ்மத் ரிழா கான் பரேல்வி அவர்களும், தாருல் உலூம் தேவபந்த் மத்ரசாவும் இந்த பிரச்சனைகள் உண்டான பொழுது இருந்திருக்கவே இல்லை.

முரண்பாடு என்னவென்றால் இந்திய துணைக்கண்டத்தில் இருந்த அமைதியான சூழலை சீரழித்தது, துரதிருஷ்டவசமாக இந்த முக்கியத்துவம் நிறைந்த குடும்பத்தைச் சார்ந்த நபர் - **இஸ்மாயில் திஹ்லவி** மற்றும் அவனது நூல் **தக்வியத்துல் ஈமான்**. அவரது சிந்தனைகள் ஏற்றுக் கொள்ள இயலாதது. அவர் ஒரு விசித்திரமான யோசனையின் பால் சென்றார். அவரது அழைப்பின் வழிமுறை போர்க்களம் போன்று இருந்தது.

நான் அவரது நூல் **தக்வியத்துல் ஈமானுக்கு**, அந்த நூல் வெளிவந்த உடன் அதற்கு மறுப்பாக பல்வேறு மொழிகளில் 250 நூற்களின் பட்டியலை நான் கண்டுள்ளேன். இதன் மூலம் அந்த நூலுக்கு இஸ்லாமிய உலமாக்களும், பாமரர்களும் எவ்வாறான எதிர்வினை ஆற்றினார்கள் என்பது விளங்கும்.

நம்மிடம் எல்லா உலமாக்களும் ,ஸூபியாக்களும் ,பாமர இஸ்லாமியரும் குப்ரிலும் ,ஷிர்க்கிலும் ,பித்அத்திலும் இருந்தனர் என்றும் இஸ்மாயில் திஹ்லவி ஒட்டுமொத்த தேசத்திற்கும் அறிவுபுகட்டியதாகவும் , முதன் முதலில் இந்திய முஸ்லிம்களை உண்மையான தவ்ஹீதை (!) அறிமுகப்படுத்தியதாகவும் காரணமாவார் என்று கூறுவதற்கு எந்த ஆணித்தரமான ஆதாரமும் இல்லை .

**சொல்லப் போனால்,ஷாஹ் வலியுல்லாஹ் முஹத்திஸ் திஹ்லவி ,ஷாஹ் அப்துல் அஜீஸ் முஹத்திஸ் திஹ்லவி மற்றும்  முஹம்மது இஸ்மாயில் திஹ்லவி ஆகியோருக்கிடையே இருந்த கால வேறுபாடு என்பது என்ன ? வெகு சில ஆண்டுகளே!**

**என்ன ஒட்டு மொத்த இந்திய துணைக்கண்டமும் இந்த குறுகிய காலத்தில் ஷிர்க்கிலும் குப்ரிலும் மூழ்கி விட்டதா???**

**அவ்வாறு குப்ரிலும் ஷிர்க்கிலும் தான் மூழ்கி விட்டதென்றால், ஹக்கீமுல் உம்மா ஷாஹ் வலியுல்லாஹ் முஹத்திஸ் திஹ்லவி மற்றும் ஷாஹ் அப்துல் அஜீஸ் முஹத்திஸ் திஹ்லவி ஆகியோர் இஸ்மாயில் திஹ்லவியைப் போல் அத்தகைய கடுமையான சொல்லாடலை பயன் படுத்தவில்லை???**

நிதர்சனமான உண்மை என்னவென்றால், ஸவாதே ஆஜம் என்னும் அஹ்லுஸ் ஸுன்னத் வல் ஜமாத்தின் கொள்கையை விட்டு தவறி சென்று

முதன் முதலில் இந்திய துணைக்கண்டத்தில் குரல் எழுப்பியவர் **இஸ்மாயில் திஹ்லவி**. நிச்சயமாக இத்தகைய ஒரு அழைப்பு நஜ்தில் தோன்றிய **முஹம்மத் பின் அப்துல் வஹாப் நஜ்தி அல் தமீமியின்** அழைப்பை ஒத்து இருக்குமே அன்றி ஷாஹ் வலியுல்லாஹ் முஹத்திஸ் திஹ்லவி அவர்களின் அழைப்புப் பணி போன்று அல்ல! [34]

அஹ்லுஸ் ஸுன்னத் வல் ஜமாத்தை பாதுகாக்கும் இயக்கமாகவும், கண்மணி நாயகம் ﷺ அவர்களின் கண்ணியத்தை முஸ்லிம்களின் இதயத்தில் நிலைநிறுத்தும் காரியத்தை செயலாற்றுவதில் பங்கு பெற்றோரில் முக்கியமானவர்கள் கைராபாத், பதாயூன் மற்றும் பரேலியைச் சார்ந்த உலமாக்களாகும்.

இந்த இயக்கம் இந்தியாவில் தோன்றிய வஹாபிய இயக்கங்களுக்கு பதில் அளிக்கும் வகையில் முக்கியத்துவம் பெற்றது. இதில் பெரும் பங்காற்றியவர்கள் இமாமே அஹ்லுஸ் ஸுன்னாஹ் இமாம் அஹ்மத் ரிழா கான் பரேலி அவர்கள்.

அன்னார் தமது மகத்தான அறிவுத் திறமையாலும், சிறந்த தலைமைப் பண்பின் காரணமாகவும் அஹ்லுஸ் ஸுன்னத் வல் ஜமாஅத்தின் கொள்கைகள், இமாம்கள் ஆகியோரின் கொள்கைகள் போற்றிப் பாதுகாக்கப்பட பாடுபட்டனர்.

**அஹ்லஸ் ஸுன்னாவைச் சேர்ந்த அறிஞர்கள், கலாசாலைகள் மற்றும் வெளியீட்டு நிறுவனங்களின் சுருக்கமான பட்டியல்:**

- மவ்லானா வாஸீ அஹ்மத் முஹத்திஸ் சூரத்தி
- மவ்லானாஅம்ஜத் அலி ஆஜ்மி
- மவ்லானா நயீமுத்தீன் முராதாபாதி
- ஸெய்யித் ஜமாத் அலி ஷாஹ் முஹத்திஸ் அலிபுரி
- மவ்லானா ஸெய்யித் தீதாத் அலி அல்வாரி
- மவ்லானா ஹாமித் ரிழா காதிரி
- மவ்லானா முஸ்தபா ரிழா காதிரி நூரி
- மவ்லானா அப்துல் முக்ததிர் பதாயூனி
- மவ்லானா அப்துல் காதிர் பதாயூனி
- மவ்லானா அப்துல் அலீம் ஸித்தீக்கி
- மவ்லானா ஸெய்யித் முஹம்மத் முஹத்திஸ் அஷ்ரபி கச்சோச்வி
- மவ்லானா ஜபருத்தீன் காதிரி பிஹாரி
- முப்தி முஹம்மத் அப்துல் பாகி புர்ஹானுல் ஹக் ஜபல்பூரி

[34] அன்பாஸ் அல் ஆரிபீன் ,பக்கம் 18-19 ,மக்தபா பலாஹ் , தேவ் பந்த்

- மவ்லானா ஹஷ்மத் அலி லக்னவி
- மவ்லானா கராமத்துல்லாஹ் திஹ்லவி
- மவ்லானா ஹுசைன் ரிழா பரேல்வி

சமகால உலமாக்கள்:

- முப்தி முஹம்மத் அக்தர் ரிழா காதிரி அஸ்ஹரி
- மவ்லானா ஷாஹ் அஹ்மத் நூரானி
- மவ்லானா தெஹ்ஸீன் ரிழா பரேல்வி
- முப்தி முஹம்மத் ஷரீபுல் ஹக் அம்ஜதி
- அல்லாமா அர்ஷதுல் காதிரி
- அல்லாமா ஸெய்யித் மஹ்மூத் அஹ்மத் ரிழ்வி லாகூரி
- முப்தி அப்துல் மன்னான் ஆஜ்மி
- முப்தி குலாம் முஹம்மத் ரிழ்வி நாக்பூரி
- முப்தி முஹம்மத் அப்துல் கைய்யூம் காதிரி ஹாசார்வி
- பேராசிரியர் முஹம்மத் மஸூத் அஹ்மத் முஜத்திதி மழரி
- முப்தி ஜாபர் அலி நுஃமானி
- முப்தி ஜலாலுத்தீன் அஹ்மத் அம்ஜதி
- மவ்லானா ஸெய்யித் முஹம்மத் மதனி அஷ்ரபி கச்சோச்வி
- முப்தி முஹம்மத் அஷ்பாக் ஹுசைன் நயீமி
- அல்லாமா ஜியா உல் முஸ்தபா காதிரி
- க்வாஜா முஸப்பர் ஹுசைன் ரிழ்வி
- மவ்லானா முஜீப் அஷ்ரப் ரிழ்வி
- மவ்லானா அப்துல் ஹக்கீம் ஷரப் காதிரி
- ஷாஹ் துராபுல் ஹக் காதிரி
- ஸெய்யித் ஹாமித் அஷ்ரப் கச்சோச்வி
- மவ்லானா கமருஸ்ஸமான் ஆஜ்மி
- மவ்லானா முஹம்மத் அஹ்மத் ஆஜ்மி மிஸ்பாஹி

**கலாசாலைகள் மற்றும் பல்கலைக்கழகங்கள்:**

- மன்சார் ஏ இஸ்லாம் , பரேலி
- மழ்ஹர் ஏ இஸ்லாம் , பரேலி
- அல் ஜாமிஅத்துல் அஷ்ரபியா , முபாரக்பூர்
- ஜாமியா நயீமிய்யா , முராதாபாத்
- தாருல் உலூம் ஹிஸ்புல் அஹ்னாப் , லாகூர்
- தாருல் உலூம் அம்ஜதியா , கராச்சி
- ஜாமிஆ நிஜாமியா ரிழ்வியா , லாகூர்
- தாருல் உலூம் இஷாகிய்யா , ஜோத்புர்
- மர்கஸ் சக்காபத் அஸ் ஸுன்னியா , கோழிக்கோடு ,கேரளா

- ஜாமியா ஸஅதியா, காசர்கோடு, கேரளா
- ஜாமியா ஹஸ்ரத் நிஜாமுத்தீன் அவ்லியா , புது தில்லி
- தாருல் உலூம் அம்ஜதிய்யா , நாக்பூர்
- தாருல் உலூம் ஃபைஸுர் ரஸூல்,பராஉன் ஷரீப்
- ஜாமியா அஷ்ரப் , கிச்சவ்சா ஷரீப்
- ஜாமியா ஹமீதியா ரிழ்வியா, பனாரஸ்
- ஜாமியா நயீமியா , லாகூர்
- தாருல் உலூம் நயீமியா , கராச்சி
- அல் ஜாமியத்துல் இஸ்லாமியா , பைஜாபாத்
- தாருல் உலூம் அலீமிய்யா , ஜாம்தாஷாஹி பஸ்தி
- தாருல் உலூம் முஹம்மதிய்யா , மும்பை
- ஃபைஸுல் உலூம் ,ஜாம்ஷேத்பூர்
- ஜியா உல் இஸ்லாம் , பெங்கால்
- அன்வாருல் குர்ஆன், பல்ராம்பூர்
- தாருல் உலூம் கரீப் நவாஸ் , இலாஹாபாத்
- அஹ்சனுல் மதாரிஸ்,கான்பூர்
- தாருல் உலூம் வார்சிய்யா,லக்னோ

**பதிப்பாளர்கள்:**

- ஸுன்னி தாருல் இஷாஅத் ,முபாரக்பூர்
- அல் மஜ்மஅல் இஸ்லாமி,முபாரக்பூர்
- மர்கஸ் மஜ்லிஸ் ஏ ரஸா , லாகூர்
- ரஸா அகாடமி, லாகூர்
- ரஸா அகாடமி, மும்பை
- இதாரா தஹ்கீகத் ஏ இமாம் அஹ்மத் ரிழா,கராச்சி
- இதாரா மஃரிப் ஏ நுஃமானியா,லாகூர்
- தாருல் கலாம்,தில்லி
- அல் மஜ்மா அல் மிஸ்பாஹி, முபாரக்பூர்
- இதாரா ஏ அப்கார் ஏ ஹக்,பைசி பூர்னியா
- மக்தபா ஜாமே நூர், தில்லி
- ஃபாரூக்கியா புக் டிப்போ, தில்லி
- ரிஸ்வி கிதாப் கர், தில்லி மற்றும் பிவான்தி
- மக்தபா நயீமியா, தில்லி
- குத்ப்கானா அம்ஜதிய்யா,பஸ்தி
- காதிரி கிதாப் கர்,பரேலி
- காதிரி புக் டிப்போ,பரேலி
- மக்தபா ரஹ்மானியா ரிஸ்விய்யா, பரேலி

**பத்திரிகைகள்:**

- கன்ஜுல் ஈமான், மாதாந்தர சஞ்சிகை ,தில்லி
- அஷ்ரபியா, மாதாந்தர சஞ்சிகை, முபாரக்பூர்
- ஜஹான் ஏ ரஸா, மாதாந்தர சஞ்சிகை ,லாகூர்
- ஸுன்னி துனியா, மாதாந்தர சஞ்சிகை ,பரேலி
- அஃலா ஹழ்ரத், மாதாந்தர சஞ்சிகை ,பரேலி
- தையிபா, மாதாந்தர சஞ்சிகை ,அஹமதாபாத்
- யாசீன், மாதாந்தர சஞ்சிகை ,ராஜஸ்தான்
- ஸிராத்தே முஸ்தகீம், மாதாந்தர சஞ்சிகை, ராஜஸ்தான்
- மாஹ் ஏ தையிபா, மாதாந்தர சஞ்சிகை ,ராஜஸ்தான்
- ஜியா ஏ ஹரம், மாதாந்தர சஞ்சிகை, லாகூர்
- அல் கவ்ஸர், காலாண்டு வெளியீடு ,சஹ்சரம்
- மஆரிப் ஏ ரஸா, ஆண்டு வெளியீடு, கராச்சி

இந்த அனைத்து நிறுவனங்களின் மையப் புள்ளி என்பது

*" யா அல்லாஹ்! நீ எங்களை நேரான வழியில் நடுத்துவாயாக! (அவ்வழி) நீ எவர்களுக்கு அருள் புரிந்தாயோ அவர்கள் (சென்ற) வழி. (உன்) கோபத்திற்குள்ளானவர்களோ, வழிதவறியவர்களோ சென்ற வழியல்ல. "*

இந்திய துணைக்கண்டத்தில் உள்ள சில வலிமார்கள்:

- ஹழ்ரத் தாத்தா கஞ்சபக்ஷ் ஹுஜ்வேரி லாகூரி
- ஹழ்ரத் க்வாஜா முயீனுத்தீன் ஜிஷ்தி அஜ்மீரி
- ஹழ்ரத் ஷெய்கு பஹாவுத்தீன் ஜக்கரிய்யா முல்தானி
- ஹழ்ரத் க்வாஜா பரீதுத்தீன் கஞ்சஷஹர்
- ஹழ்ரத் க்வாஜா குத்புத்தீன் பக்தியார் காக்கி
- ஹழ்ரத் மக்தூம் அலாவுதீன் அலி அஹ்மத் ஸாபிர் கல்யாரி
- ஹழ்ரத் மஹபூப் ஏ இலாஹி நிஜாமுத்தீன் அவ்லியா
- ஹழ்ரத் ஷர்புத்தீன் யஹ்யா முனீரி
- ஹழ்ரத் மக்தூம் ஜஹானியான் ஜஹான் கஷ்த்
- ஹழ்ரத் செய்யித் அலி ஹம்தானி
- ஹழ்ரத் மக்தூம் செய்யித் அஹ்மத் அஷ்ரப் ஜஹாங்கீர் சம்னானி
- ஹழ்ரத் ஷெய்கு அப்துல் ஹக் முஹத்திஸ் திஹ்லவி
- ஹழ்ரத் முஜத்தித் ஏ அல்பதானி ஷெய்கு அஹ்மத் பாரூக் ஸிர்ஹந்தி

முஸ்லீம்கள் இன்றும் இப்பெருமக்களின் அடிச்சுவடுகளைப் பின்பற்றினால், அவர்கள் உயர் பதவிகளையும், அல்லாஹ்வின் அபரிமிதமான ஆதரவையும் அடைய முடியும். இப்பெருமக்கள் இந்திய துணைக்கண்டத்தை இஸ்லாம் மற்றும் ஈமானுடன் ஆசீர்வதித்து அறிவூட்டிய தூய ஆத்மாக்கள், ஈமானிய ஒளியின் மையப்புள்ளியாகவும் ஆக்கினர்.

**முற்றும்**

# பிரிவினையின் சுருக்கமான காலஅட்டவணை

| ஹிஜ்ரி \| ஆங்கில ஆண்டு | நிகழ்வு |
|---|---|
| 1172 \| 1763 | இமாம் ஷாஹ் வலியுல்லாஹ் முஹத்திஸ் திஹ்லவி அவர்களின் மறைவு. (1114-1172 \| 1703-1763) |
| 1193 \| 1779 | இஸ்மாயில் திஹ்லவியின் பிறப்பு. |
| 1239 \| 1824 | இமாம் ஷாஹ் அப்துல் அஜீஸ் முஹத்திஸ் திஹ்லவி அவர்களின் மறைவு. (1159-1239 \| 1745-1824) |
| 1240 \| 1825 | இந்தியாவில் பிரிவினை நெருப்பை கொழுந்து விட்டெறித்த, இஸ்மாயில் திஹ்லவியின் "**தக்வியத்துல் ஈமான்**" நூல் முதன் முறையாக வெளியிடப்பட்டது.<br><br>ஷெய்கு பஜ்லே ஹக் கைராபாதி அவர்கள் இஸ்மாயில் திஹ்லவிக்கு மறுப்புரையாக "**தஹ்கீக் அல் பத்வா பீ இப்தால் அல் தக்வா** "நூலை வெளியிட்டார்கள். |
| | '**யக் ரோஜி** ' நூலில் இஸ்மாயில் திஹ்லவி பொய் உரைப்பது அல்லாஹ்வின் குத்ரத்தில் உள்ளது என்று நிரூபிக்க முயல்கிறார். அல்லாஹ் பொய் சொல்வது சாத்தியம் என்கிறார் |
| | '**ஸிறாத்தே முஸ்தகீம்** ' நூலினை எழுதினார் இஸ்மாயில் திஹ்லவி ( அவரது ஆசிரியர் செய்யத் அஹ்மத் ரேபரேல்வி இணை |

| | |
|---|---|
| | ஆசிரியர் என்றும் சொல்லப்படுகின்றது ) |
| 1246 \| 1831 | இஸ்மாயில் திஹ்லவி தனது 53வது வயதில் பால்கோட்டில் கொல்லப்பட்டார். |
| 1264 \|1847 | ஷாஹ் பஜ்லே ரஸூல் பதாயூனி அவர்கள் '**பவாரிக் அல் முஹம்மதியா** ' நூலினை எழுதினார்கள். |
| 1265 \| 1848 | ஷாஹ் பஜ்லே ரஸூல் பதாயூனி அவர்கள் '**ஸைப் அல் ஜப்பார்** ' நூலினை எழுதினார்கள்.<br><br>ஷெய்கு ரஹ்மத்துல்லாஹ் கீரான்வி அவர்கள் கிறிஸ்துவ மிஷனரிகளை ஆக்ராவில் வைத்து நடைபெற்ற புகழ்பெற்ற விவாதத்தில் வெல்கிறார்கள்.<br><br>ஷாஹ் பஜ்லே ரஸூல் பதாயூனி அவர்கள் எழுதிய '**மூத்தகத் அல் முன்தகத்** ' நூல் வெளியிடப்பட்டது |
| 1272 \| 1856 | அஃலா ஹழ்ரத் இமாம் அஹ்மத் ரிழா கான் பரேல்வி அவர்களது பிறப்பு. |
| 1273 \| 1857 | சிப்பாய் கலகம் என்னும் முதல் இந்திய சுதந்திரப் போர். |
| 1278 \| 1861 | ஆங்கிலேயர்களால் அந்தமான் தீவுகளுக்கு நாடு கடத்தப்பட்ட ஷெய்கு பஜ்லே ஹக் கைராபாதி அவர்கள் ஷஹீதானார்கள். (1212-1278 \| 1797 -1861 ) |
| 1283 \| 1866 | தேவ்பந்த் மத்ரஸா காஸிம் நாணோத்வி, ரஷீத் அஹ்மத் |

| | |
|---|---|
| | கங்கோஹி மற்றும் சிலரால் நிறுவப்பட்டது. |
| 1290 \| 1872 | காஸிம் நாணோத்வி எழுதிய '**தக்தீருன் நாஸ்**' நூல் வெளியிடப்பட்டது. |
| 1291 \| 1873 | ஷெய்கு ஹாபிஸ் பக்ஷ் அவர்கள் '**தக்தீருன் நாஸ்**' நூலுக்கு மறுப்பாக எழுதிய "**தன்பீஹ் அல் ஜுஹ்ஹல்**" நூல் வெளியிடப்பட்டது. |
| 1297 \| 1879 | காஸிம் நாணோத்வியின் மறைவு. |
| 1300 \| 1882 | ஷெய்கு அப்துல் கஃப்பூர் அவர்கள், அப்துல் ஹை லக்னவி அவர்களின் சான்றொப்பதுடன் எழுதிய "**இப்தால் ஏ அக்லாத் ஏ காஸிமிய்யா**" நூல் வெளியிடப்பட்டது. |
| 1302 \| 1884 | ஷெய்கு அப்துஸ் ஸமீ ராம்பூரி அவர்கள் எழுதிய "**அன்வார் ஏ ஸாத்தியா**" நூலின் முதல் பதிப்பு வெளியிடப்பட்டது. |
| 1304 \| 1886 | கலீல் அஹ்மத் அம்பேத்வி, ரஷீத் அஹ்மத் கங்கோஹியின் சான்றொப்பதுடன் எழுதிய '**பராஹீனே காத்தியா** 'நூல் வெளியிடப்பட்டது. |
| 1306 \|1888 | பஹவல்பூரில் நடந்த விவாதத்தில் ஷெய்கு குலாம் தஸ்தகீர் கஸவ்ரி அவர்கள் தேவ்பந்திகளை தோற்கடித்து, வென்றார்கள். |
| 1307 \| 1889 | ஷெய்கு அஹ்மத் ஹசன் கான்பூரி அவர்கள் இம்கான் ஏ கித்ப் கொள்கையை, தமது "**தன்ஸீஹ்** |

| | |
|---|---|
| | **அர் ரஹ்மான் அன் ஷாயிபாத்தில் கதிபி வன் நுஅசான்"** நூலில் மறுத்தார்கள்.<br><br>**"தன்ஸீஹ் அர் ரஹ்மான்"** நூலுக்கு மறுப்பளித்து மஹ்மூத் அல் ஹசன் தேவ்பந்தி **'ஜுஹ்த் அல் முகில்'** நூலினை எழுதினார்.<br><br>ஸெய்யித் அஹ்மத் பரக்கத் டோங்கி அவர்கள் **"ஸம்ஸாம் அல் காதிப் லி ராஸில் முப்தாரி அலல்லாஹ் அல் காதிப்"** நூலினை எழுதினார்கள்.<br><br>முப்தி முஹம்மத் அப்துல்லாஹ் டோங்கி அவர்கள் **"உஜாலாத்தூர் ராகிப் பி இம்தினாய்யி காதிபில் வாஜிப்"** நூலினை எழுதினார்கள்.<br><br>ஷெய்கு அப்துஸ் ஸமீ ராம்பூரி அவர்கள் எழுதிய **"அன்வார் ஏ ஸாத்தியா"** நூலின் இரண்டாம் ஹரமைன் ஷரீப் உலமாக்களின் சான்றொப்பதுடன் பதிப்பு வெளியிடப்பட்டது |
| 1307 \| 1889 | **"ஸுப்ஹான் அஸ் ஸுப்புஹ்"** நூலினை அஃலா ஹழ்ரத் அவர்கள் எழுதினார்கள் .இம்கான் ஏ கித்ப் கொள்கை குப்ரானது என பத்வா வெளியிட்டார்கள் .எனினும் தக்ஃபீர் செய்வதிலிருந்து நிதானம் காத்தார்கள். |
| 1308 \|1890 | மவ்லானா குலாம் தஸ்தகீர் கஸவ்ரி அவர்கள் **"தக்தீஸ் அல் வகீல் அன் தவ்ஹீன் அர் ரஷீதி வல் கலீல்"** நூலினை வெளியிட்டார்கள். |

| | |
|---|---|
| | ரஷீத் அஹ்மத் கங்கோஹியின், வுகூ வை மறுத்து ஒதுக்காத பத்வா வெளிவந்தது .அஹ்லுஸ் ஸுன்னாஹ் உலமாக்கள் அவரின் மீது தக்ஃபீர் பத்வா வழங்கினர். |
| 1309 \|1892 | மவ்லானா நசீர் அஹ்மத் ராம்பூரி தேவ்பந்திகளை மறுக்கும் **“பவாரிகுல் லாமியா லிமன் அராதா இத்பாயி அன்வார் ஏ ஸாத்தியா** "நூலினை எழுதினார்கள். |
| 1310 \|1893 | லக்னோ நகரில் நத்வத்துல் உலமா நிறுவப்பட்டது .அஃலா ஹழ்ரத் மற்றும் இன்னபிற அஹ்லுஸ் ஸுன்னாஹ் உலமாக்களும் முதல் மாநாட்டில் கலந்து கொண்டனர். |
| 1311 \| 1894 | நத்வந்துல் உலமாவின் இரண்டாவது மாநாடு .அஹ்லுஸ் ஸுன்னாஹ் உலமாக்கள் அனைத்து கொள்கை பிரிவுகளும் உள்ளடக்கம் என்று நிகழ்ச்சி நிரல் வெளிவந்த பின்னர் புறக்கணிக்கின்றனர். |
| 1313\| 1896 | அஃலா ஹழ்ரத் அவர்களது பதாவா அல் ஹரமைன் சான்றொப்பங்களுடன் வெளிவந்தது. (தேவ்பந்திகள் இது வரை காபிர்கள் என்று தீர்ப்பளிக்கப்படவில்லை ) |
| 1319 \|1901 | அஷ்ரப் அலி தான்வி '**ஹிப்ழுல் ஈமான்**' நூலினை எழுதினார். |
| 1320 \|1902 | இமாம் பஜ்லே ரஸூல் அவர்கள் எழுதிய "**முத்தகத் அல் முன்தகத்**" நூலுக்கு கூடுதல் |

| | |
|---|---|
| | விளக்கங்களுடன் அஃலா ஹழ்ரத் அவர்கள் எழுதிய "**முஸ்தனத்**" நூல் வெளிவந்தது. தேவ்பந்தி முன்னோடிகளின் மீது தக்ஃபீர் பத்வா. |
| 1323 \| 1905 | அஃலா ஹழ்ரத் அவர்கள் தமது இரண்டாவது ஹஜ்ஜை நிறைவேற்றி, "**முஸ்தனத்**" நூலில் உள்ள பத்வாக்களுக்கு சான்றொப்பங்கள் வாங்கினார்கள்.<br><br>ரஷீத் அஹ்மத் கங்கோஹியின் மறைவு. |
| 1324 \| 1906 | அஃலா ஹழ்ரத் அவர்கள் "**தவ்லத்துல் மக்கியா**" நூலினை எழுதுகின்றார்கள். பெரும்பான்மையான உலமாக்கள் அதற்கு சான்றொப்பங்கள் அளிக்கின்றார்கள். மக்கா ஷரீஃப் அதற்கு ஒப்புதல் அளிக்கின்றார்.<br><br>இந்தியா திரும்பியதும், சான்றொப்பங்கள் "**ஹுஸாமுல் ஹரமைன்**" என்ற பெயரில் உருது மொழிபெயர்ப்புடன் வெளியிடப்படுகின்றது. |
| 1325 \| 1907 | '**முஹன்னத்**' எழுதப்பட்டதாக சொல்லப்படுகின்றது. ஆனால் பதிப்பித்து வெளிவரவில்லை. |
| 1326 \| 1908 | அஃலா ஹழ்ரத் அவர்கள் "**தம்ஹீதே ஈமான்**" நூலினை எழுதினார்கள். |
| 1328 \|1909 | முராதாபாத்தில் விவாதம் நடத்த திட்டமிடப்பட்டது. தேவ்பந்திகள் |

| | |
|---|---|
| | அதில் பங்கு பெறாமல் பின் வாங்கினர்.<br><br>விவாத ஒப்பந்தமும் , அப்போதிருந்த சூழ்நிலையின் விளக்கமும் அஃலா ஹழ்ரத் அவர்கள் எழுதிய **"அப்ஹாஸ் ஏ ஆகிரா "** என்னும் நூலில் சுருக்கமாக கூறப்பட்டுள்ளது |
| 1329 \| 1910 | தேவ்பந்திகளின் கூற்றுப்படி, '**முஹன்னத்**' பதிப்பித்து வெளிவந்தது. |
| 1340 \| 1921 | அஃலா ஹழ்ரத் அவர்களது மறைவு. |
| 1921ஆம் ஆண்டுக்குப் பின் | மவ்லானா நயீமுத்தீன் முராதாபாதி அவர்கள் '**அல் முஹன்னத்** ' நூலில் உள்ள பொய்களையும், மோசடிகளையும் மறுத்து **“தாப் அத் தல்பிசாத்''** நூலினை எழுதினார்கள். |

**நன்றி: தி கில்லர் மிஸ்டேக், உஸ்தாத் அபூ ஹசன் ரிஸ்வி, பக்கம் 99.**


யா அல்லாஹ் !
உண்மையை உண்மை என
நாங்கள் உணர்ந்து
அவ்வுண்மையை
நாங்கள் பின்பற்றி நடக்கும்படி
உணர்த்தி நேர்வழி காட்டி அருள் !

பொய்மையை பொய் என
நாங்கள் உணர்ந்து
அப்பொய்யை விட்டகன்று
நடக்கும்படியாக
விளக்கப்படுத்தி நேர்வழி
காட்டி அருள் !